தேகத்தில் இருக்கின்றனர். இந்த லிங்க தேகம், வைகுண்டத்தின் விரஜா நதியில் ஸ்னானம் செய்வது வரைக்கும் இருக்கின்றது. ஜீவரின் லிங்கதேகம் மற்றும் அனிருத்த தேகத்தின் நடுவில் ஜீவாச்சாதிகா மற்றும் பரமாச்சாதிகா என்னும் திரைகள் உள்ளன. இங்கு ஸ்ரீஹரி த்ரிவ்ருக் என்னும் பெயரில் இருக்கிறான்.

ஆரதிக தசகலெகளுள்ள ஷ
ரீர அனிருத்தகள மத்யதி
சேரியிப்பவு ஜீவ பரமாச்சாதிக த்வயவு |
பாரதந்ததி தானவர அதி
தூரகைசுத ஸ்ரீஜனார்த்தன
மூரு குணதொளகிப்பனெந்திகு த்ரிவுதேந்தெனிஸி || (9-14)

அனிருத்த தேகத்தில் ருத்ரர் முதலான தேவதைகள் இருக்கின்றனர். ஸ்தூல தேகத்தில் அனைத்து தத்வாபிமானி தேவதைகளுடன் அசுரர்களும் நிலைத்திருக்கின்றனர்.

அனந்தானந்த ஜீவராசிகளில் 84 லட்ச விதங்களான ஸ்த்ரிபுருஷ ஜாதிகள் உள்ளன. இவற்றில் சாத்விக, ராஜஸ, தாமஸ என்று மூன்றுவிதமான ஜீவிகள் உள்ளன. அனைத்து ஜீவிகளின் ஸ்வரூபமும் அப்ராக்ருதமாக இருக்கின்றன. எப்போதும் ஸ்ரீஹரியின் அதினத்திலேயே இருக்கின்றன.

***

**வைசாக சுத்த பிரதமை**
**கலியகக்கிற்கு சமமில்லை**

கலியுகக்கெ சமயயுகவில்லவய்ய

கலுஷ ஹரிஸி கைவல்ய வீவுதய்ய
சலெ நாமகீர்த்தனெ ஸ்மரணெ சாகய்ய
ஸ்மரிசலு சாயுஜ்ய பதவீபுதய்யா
பலவந்த ஸ்ரீரங்கவிட்டலன நெனெதரெ
கலியுகதெ க்ருதயுகவாகுவுதய்ய || --ஸ்ரீஸ்ரீபாதராஜர்

கலியுகத்தில் இருக்கும் சிறப்பு குணங்களை இங்கு நிரூபிக்கிறார். புராணத்தில் 'கலௌ சங்கீர்த்ய கேசவம்' என்றது போல, ராஜர் இங்கு ஸ்ரீஹரியை நினைத்தால் பாவங்கள் அனைத்தும் நீங்கி மோட்ச பதவியையே கொடுக்கிறான் என்கிறார். இதையே ஸ்ரீபுரந்தரதாசர் 'கலியுகதலி ஹரி நாமவ நெனெதரே குலகோடிகளு உத்தரிசுவுது' என்றார். அவனை நினைத்தாலே சாயுஜ்ய மோட்சம் கிடைக்கும் என்கிறார். ஒரு இடத்தில் ஸ்ரீவாதிராஜர் 'ஹரிபதவ நெனெவங்கெ நரகத பயவில்ல' என்றார்.

ஸ்ரீவியாசராஜரும் இதைப் பற்றி சொல்லும்போது:
கிருஷ்ண கிருஷ்ண கிருஷ்ண எந்து மூரு பாரி நெனெயிரோ
சந்துஷ்டனாகி முகுதி கொட்டு மிக்க பார ஹொருவனோ ||
என்றார்.

ஸ்ரீஹரியின் நாமங்களின் மகிமை, அனைத்தையும் கொடுக்க வல்லது என்றே அனைவரும் பாடுகின்றனர். எந்த காலத்திற்கும் நிஸ்சல தூய்மையான பக்தியுடன், நற்சிந்தனையுடன் ஸ்ரீஹரியை நினைக்க வேண்டுமென்பதே அனைவரின் விருப்பமாக இருக்கிறது.

சாதகர்களுக்கு கலியுகம் என்பது ஒரு பர்வகாலமாக இருக்கிறது என்கின்றனர். அதற்கென்றே புரந்தரதாசர்:

ஸ்மரணெயில்லதெ பாளி பதுகிதரேனு |
நரஜன்மதல்லி ஜனிஸி பலவேனு ஹரியே || - என்று வேண்டுகிறார்.
கனகதாசர் ஒரு கிருதியில்:

நடெவ கார்யகளெல்ல நுடியலென்னளவல்ல
ஒடெய நீனே பல்லெ கலியுகத மஹிமெ |
தடவ மாடலிபேட தாளலாரது லோக
ம்ருடன வைரிய பெத்த ஆதிகேஷவனே ||

## வைசாக சுத்த த்விதியை
## உண்மையான ஸ்னானம்

ஸ்னான மாடிரய்யா ஞானதீர்த்தல்லி
நானு நீனெம்ப அஹங்காரவ பிட்டு ||ப||

தன்னொளு தானே திளிததொந்து ஸ்னான
அன்யாயகாரி களெதரொந்து ஸ்னான
அன்யாயவாடதித்ததொந்து ஸ்னான
சென்னாகி ஹரிய நெனெதரொந்து ஸ்னான ||1||

பரசதிய பயசதித்தரெ ஒந்து ஸ்னான
பர நிந்தெ மாடதித்தரெ ஒந்து ஸ்னான
பர த்ரவ்ய அபஹரிசதிரெ ஒந்து ஸ்னான
பரதத்வ திளிதுகொண்டரே ஒந்து ஸ்னான ||2||

தந்தெதாயிகள சேவெ ஒந்து ஸ்னான
முந்தின மார்க திளிதரொந்து ஸ்னான
பந்தனவனு பிடிசிதரொந்து ஸ்னான
சந்திஸி திளிதுகொண்டரே சேது ஸ்னான ||3||

அத்தெமாவன சேவே ஒந்து ஸ்னான
பர்தன மாது கேளுவுதொந்து ஸ்னான
க்ஷேத்ரபாத்ர சஹவாச ஒந்து ஸ்னான
பார்த்தசாரதி நிம்ம த்யாஅவே ஸ்னான ||4||

வேதசாஸ்திரகள ஓதிதரொந்து ஸ்னான
பேதாபேத திளிதரொந்து ஸ்னான
சாது சஜ்ஜனர சங்க ஒந்து ஸ்னான
புரந்தரவிட்டலன த்யானவே ஸ்னான ||5||

ஸ்னானம் என்பது அகம் புறம் என்று இரு வகைப்படும். தாசர் இங்கு அக-ஸ்னானத்தைப் பற்றி சொல்லி, இதுவே மிகச் சிறந்தது என்று கூறுகிறார். இதுவே உண்மையான ஸ்னானமாகி இஹ-பரங்களில் சத்கதிக்கு காரணமாகிறது. தாசர் கொடுத்திருக்கும்

பெரிய பட்டியலில் ஒவ்வொன்றும் மிகவும் அற்புதமாக இருக்கிறது. எது நம்மால் முடியுமோ அதை பின்பற்றினால், நம் மனதில், வீட்டினில், சமூகத்தில் சுக-சாந்தி நிலைக்கும் என்பதில் சந்தேகம் இல்லை. இதன் மூலம் நமக்கு அகத்தூய்மை ஏற்படுகிறது. தீர்த்தக்ஷேத்திரங்களில் செய்யும் ஸ்னானம் இரு (அக-புற) சுத்திக்கும் காரணமாகிறது.

**வைசாக சுத்த த்ருதியை**
**கிடமான பக்கியே ஸ்னானம்**

வாழ்க்கையில் புறத்தூய்மையைவிட அகத்தூய்மையே மிகச்சிறந்தது. புறத்தூய்மைக்கு சுத்தமான நீரில், சங்கல்பம் செய்தவாறு விதிப்படி ஸ்னானம் செய்வது என்றாகிறது. அகத்தூய்மை என்றால் சுத்தமான மனதுடன், நற்குணங்களினால் கூடிய மனத்தூய்மை. இத்தகைய தூய்மையுடன் செய்யும் நற்செயல்களே, உண்மையான ஸ்னானம் என்று தாசர் கூறுகிறார்.

தனுவ நீரொளகித்தி பலவேனு தன்ன
மனதல்லி த்ருடபக்தியில்லத மனுஜரு ||ப||

தானதர்மகளன்னு மாடுவுதே ஸ்னான
ஞானதத்வங்கள திளிவுதே ஸ்னான
ஹீன பாஷங்கள ஹரிவுதே ஸ்னான
த்யானதி மாதவன நோடுவுதே ஸ்னான ||1||

குருகள ஸ்ரீபாத தீர்த்தவே ஸ்னான
ஹிரியர தர்ஷன மாடுவுதே ஸ்னான
கரெது அதிதிகெ அன்ன இடுவுதே ஸ்னான
நரஹரி சரணவ நம்புவுதே ஸ்னான ||2||

துஷ்டர சங்கவ பிடுவுதே ஸ்னான
சிஷ்யர சஹவாச மாடுவுதே ஸ்னான
ஸ்ருஷ்டியொளகெ சிரி புரந்தரவிட்டலன
முட்டி பஜிஸி புண்ய படெவுதே ஸ்னான ||3||

இப்படி நற்காரியங்கள், நல்லவர்கள் நட்பு ஆகியவையே மனிதன் செய்யவேண்டிய ஸ்னானம் என்கிறார். இந்த நற்குணங்களைப் பெற்றபிறகு செய்யும் ஸ்னானம் என்பது வெறும் நடைமுறைக்காக செய்யப்படுவதே ஆகும். 'ஸ்னானம் குர்யாத் யதா விதி:' என்று ஸ்ரீமதாசார்யர் கூறியது இதே பொருளில்தான் என்று அறிய வேண்டும். சத்புருஷர்களின் நட்பு, அவர்களின் தரிசனம், நற்சிந்தனைகளை வளர்த்துக் கொள்வது ஆகியவையே சுத்தமான ஸ்னானம் என்கிறார். கோபாலதாசர் 'தியானமாடிதவ ஸ்னான மாடிதவ' என்றதும் இதையே. இங்கு தாசர் உண்மையான ஸ்னானம் இவைகளே என்று கூறி, சாதகர்கள் எப்படி இருக்கவேண்டும் என்றும் சொல்கிறார்.

**வைசாக சுத்த சதுர்த்தி**

**அதிதி பூஜை**

மனிதன் பிறந்து சிறிது அறிவு பெற்றபிறகு, இறுதிவரை கற்றுக் கொள்ள வேண்டியது பல இருக்கின்றன. அவற்றில் ஒன்று அதிதிகளை வரவேற்பது, உபசரிப்பது. 'அதிதி தேவோ பவ' என்று வேதத்தில் சொன்னால், தாசர் 'பந்த அதிதிகள பூஜிசுவதெ ஹப்ப' என்றார். இதை ஸ்ரீவிஜயதாசரின் வாக்கினில் கேட்போம்.

பந்த அதிதியன்னு தன்னெய பாகில
முந்தெ காணுத்தலிவெ எந்து எதிருகொண்டு
வந்திஸி கரமுகிது த்வந்த்வ பாதக்கெரகி
தந்தெ அவல்லிந்த தயமாடி பந்திரி எந்து
ஒந்தொந்து மாதனு ஆனந்ததிந்தலி பேளி
தந்து பீடவ சந்ததிந்தலி நடுலி
மந்திரதொளகெ வசுந்தர விபுதன்னு
மந்தஹாசதல்லி நயதிந்த குள்ளிரிஸி, ஜல
திந்த சரண தொளிதானந்த பரிதனாகி
சந்தேஹ பிட்டு சொபகினிந்த சிரத மேலே
பிந்து மாதுர ஜல பந்து பளக கூடி
குந்ததெ தரிஸீ தா மந்திரதல்லி செல்லி
ஒந்தொந்து பரியல்லி பொந்தி சுகதல்லிரு
மந்தரதர நம்ம விஜயவிட்டல ஹரியெ
எந்தெந்திகு பிடதெ வந்திஸு மனதல்லி || -- ஸ்ரீவிஜயதாசர்

'பெல்லவாகிரபேகு பந்து ஜனரொளகெ' என்றார் ஸ்ரீபுரந்தரதாசர். சஜ்ஜனர்களுக்கு நாம் என்றும் பாரமாக இருக்கக்கூடாது. காரணம் 'வைஷ்ணவா: மம பாந்தவா:' என்றதால், அதிதிகளில் ஸ்ரீஹரியின் விசேஷ சன்னிதானம் இருக்கிறது. இவரை உபசரிப்பதால் ஸ்ரீஹரி மகிழ்கிறான். ஆகையால் அவர்களை சிறப்பாக உபசரிக்கவேண்டும். இதனை எப்படி செய்யவேண்டும் என்பதை தாசர் விரிவாக விளக்குகிறார்.

முதலில் வணங்கி, மரியாதையுடன் வரவேற்று, நல்ல வார்த்தை களை பேசவேண்டும். எந்தவொரு காரணத்தினாலும் அவர் மனம் புண்படாதவாறு பார்த்துக் கொள்ளவேண்டும். புன்னகையுடன் அவரது நலன்களை விசாரித்து அவரை மகிழ்விக்க வேண்டும். இவை அனைத்தும் அவருள் இருக்கும் ஸ்ரீஹரிக்கு நாம் செய்யும் சேவை என்ற நற்சிந்தனையுடன் செய்யவேண்டும்.

**வைசாக சுத்த பஞ்சமி**

**குருவின் கருணை மகிமை**

'குருவின குலாமனாகுவ தனக தொரெயதண்ண முகுதி' என்பது ஸ்ரீபுரந்தரதாசரின் வாக்கு. நமக்கு உண்மையான அறிவைக் கொடுப்பவர் குரு. குருவின் அருள் கண்டிப்பாகத் தேவை என்று தாசர் ஒரு சுளாதியில் இவ்வாறு சொல்கிறார்.

குருமுகவில்லதலெ தொரெயது ஞானமார்க்க -- ஸ்ரீவிஜயதாசர்
அனுபவத மாதனு பேளுவேனு கேளி
மனசின கௌடில்யவனு பிட்டாதரதிந்த
குணவந்த குரு தயவனு படெயதெ கெட்ட
மனுஜ ஜன்மதக்கிந்த கத்தியாதரு லேசு
குணபூர்ண குருபாதராயண விட்டலா ஆ
தனக நோடா ஆ கடெ சுளிதாடா || - ஸ்ரீபாதராயண விட்டலர்

இதே சுளாதியில் தாசர் மேலும் சொல்வது:
குருகள கருணவே தாரித்ர்ய பஞ்சன
குருகள கருணவே மஹாதைஸ்வர்ய காரண
குருகள கருணவெ சகல ரோக ஹரண

குருகள கருணவெ சகல துக்க நாஷன
குருகள கருணவெ சகல சுக சாதன ||

என்றால் குருவின் அருளினால் மட்டுமே அனைத்தும் கிடைப்பதற்கு சாத்தியம். 'முகுந்த பக்த்யை குருபக்தி ஜாயை' குருபக்தியினாலேயே ஹரிபக்தி கிடைக்கும்.

ஸ்ரீவாதிராஜரின் வாக்கு இது.
குருஹிரியனனுசரிஸி ஹரிய மனதொளகிரிஸி
பரகதிய பேக சாதிசிரோ ||

'குருபிரசாதோ பலவான் ந தஸ்மாத் பலவத்தரம்' என்று சாஸ்திரங்கள் குருவின் மகிமையை சொல்கிறது. குருவின் அருளினாலேயே அனைத்தையும் அடைய முடியும் என்பதற்கு இதிகாசங்களில் பல உதாரணங்கள் உள்ளன. அனைத்தும் அறிந்த சர்வக்ஞனான ஸ்ரீஹரி, தர்மத்தை பின்பற்றுவதற்காக, சந்தீபினி ஆசார்யரிடம் சென்று குருசேவை செய்தான்.

**வைசாக சுத்த சஷ்டி**
**இதுவே வைராக்கியம்**

வைராக்கியத்தைப் பற்றி ஸ்ரீகோபாலதாசர் பாடியவை மிகவும் பொருள் பொதிந்ததாக இருக்கிறது. உண்மையில் வைராக்கியம் என்றால் என்ன என்பதை விளக்குகிறார்.
ஸ்வயோக்யதெ யொளகெ ஆயதவாதத்து
நோயதெ உணுவுதெ ந்யாயத வைராக்ய
ஸ்னேஹதி ஹரிகொட்ட கர்த்ருத்வவு எனகெ
நீ இல்லதெ என்னிந்தாகதந்திப்புதெ நியாயத வைராக்ய
ஆயாசபடதெ பரர ஸ்ரேயஸ் நோடி
ஸ்ரீயரஸ நித்யனெம்புதெ வைராக்ய
மாயாரஹித தேவ கோபால விட்டலன்ன
ப்ரியதி நெச்சி அன்யக்கெரகதிப்புதெ வைராக்ய ||

ஈசாவாஸ்ய உபநிஷத்தில் 'தேன த்யக்தேன புஞ்சீதா மா க்ருத: கஸ்ய ஸ்வித்தனம்' ஸ்ரீஹரியினால் கொடுக்கப்பட்டதை வைத்து திருப்தியுடன் இரு - என்று பொருள்.

ஸ்ரீஜகன்னாததாசர் இதையே:
ஸ்வோச்சித கர்மகளாசரிசுத பலு
நீசரல்லிகே போகி யாசிசதே || என்றார்.

தன பரித்யாகவனு மாடிதடாயிது
தனவ பிட்டிரதெ தனகளு அனுதின
தனு மதனபிமானவனு பிட்டடாயிதெ
தனுமன தபிமானவனு பிட்டு குன்னி தா
மனெ மனெ சரிசதெ அனுகாலவு
கன மஹிம செல்வ கோபாலவிட்டலன
நெனெது சகல சுக உணுவுதே வைராக்ய || -- ஸ்ரீகோபாலதாசர்

அரியத வைராக்ய ஹரஹிகொம்புதக்கிந்த |
அரிது மொரெ ஹோகிரோ கோபாலவிட்டலன ஜதெ ||
-- ஸ்ரீகோபாலதாசர்

**வைசாக சுத்த சப்தமி**
**மேம்படுவகற்கான வழி**

தர்ம மரெயதிரு நிர்மத்ஸரதல்லிரு
கர்மர கொடதிரு துர்மதியாகதிரு
தர்மததிரதிரு தர்மாயா பயஸதிரு
நிர்மள தொரியதிரு மார்மலது நுடியதிரு
தர்மவ பேளதிரு வர்மவ பிடதிரு
சர்ம தேஹக்கெ ஒந்து மார்க்கவ திளியோது
கர்மதாரிய பிடு தர்மனு மெச்சுவனு
பெர்மி எம்போது தாடி துர்மார்க்கவ பிடியதிரு
நிர்மளவாகித்த அர்மிபுரவ சேரு
கூர்மாவதார நம்ம விஜயவிடலன
சத்கர்மவ நெனெது அதர்மவ களியோ || --ஸ்ரீவிஜயதாசர்

அனைவருக்கும் தெரிந்தாற்போல, ஹரிதாசர்கள் வெறும் தங்களின் சாதனைகளை முடித்து, சத்கதியை அடைய வந்தவர்கள் அல்லர். தம்முடன் சஜ்ஜனர்களையும் கொண்டு போவதற்கு வந்தவர்கள். இந்த விஷயம், தாசர் மேலே சொன்னதிலிருந்து தெரியவருகிறது. வாழ்க்கையின் ஒவ்வொரு நொடியிலும் சத்சித்தாந்த்தைப் பின்பற்றி தமது அனுபவங்களை அனைவரின் முன் வைத்தனர். எதை பின்பற்ற வேண்டும், எதை பின்பற்றக்கூடாது என்னும் நல்லறிவை மக்களுக்கு ஊட்டினர். தாசரின் வாக்கிற்கு ஈடாக இவரது சிஷ்யரான கோபாலதாசர் இன்னும் விவரமாக விஷயத்தை விளக்குகிறார்.

குரு முக்யவிரபேகு ஹரிதெய்வவென்ன பேகு
பர உபகாரவிரபேகு ப்ரதிக்ஷண
பரம தன்னவரு சமரெந்து திளியபேகு
ஹிரிது ஹிக்கதெ தானஸ்வதந்த்ர நெனபேகு
பரமாணு ஸ்தளதல்லி ஹரிவியாப்தனெனபேகு
ஈ பரியலி திளிதரெ அவனெ முக்தியோக்ய
சிரியரமண நம்ம கோபாலவிட்டலன
கருணக்கெ பாத்ரனாதவனெ இதனரிவ ||

இந்த குருசிஷ்யரின் பாசம், சஜ்ஜனர்கள் மேல் இவர்கள் வைத்திருக்கும் கருணை அனைவரும் அறிந்ததே. அனைவருக்கும் புரியக்கூடிய வாக்கியங்களால் இவர்கள் நம் கண்களைத் திறந்திருக்கின்றனர். அனைவரும் மேம்படுவதற்கான உண்மையான வழியினைக் காட்டியிருக்கின்றனர். அவர்கள் சொன்னதை நாம் பின்பற்றுவோம். அதற்கு குருவின் தயை இருக்கட்டும்.

**வைசாக சுத்த அஷ்டமி**
**ஸ்ரீமொகலகல் சேஷதாசரின் புண்யதினம்**

இரண்டாம் கட்டத்தின் தலைவரான ஸ்ரீவிஜயதாசரினால் வளர்ந்த ஹரிதாச பரம்பரை, இன்றும் அனைத்து திசைகளிலும் கொடிகட்டிப் பறந்து வருகிறது. ஸ்ரீவிஜயதாசரின் முக்கிய சிஷ்யர்களில் ஒருவர் மொதலகல் சேஷதாசர். இந்த சேஷப்பா, ஸ்ரீவிஜயதாசரிடமிருந்து கனவில் அங்கிதத்தைப் பெற்று

சேஷதாசர் என்று பெயர் பெற்றார். கணக்காளரான தந்தையின் வேலையையே செய்து வந்த இவர், ஸ்ரீபிராணதேவர், ஸ்ரீருத்ரர் ஆகியோர்களைக் குறித்து கடும்தவம் புரிந்து, சித்தி பெற்றார்.

'குரு விஜயவிட்டலா' என்ற அங்கிதத்தில் பற்பல கிருதிகளை இயற்றி, தம் கிருஹஸ்த ஜீவனத்தை நடத்தி வந்தார். நித்ய அன்னதானம், அதிதிகளின் ஆராதனை, தீர்த்தக்ஷேத்திர யாத்திரை ஆகியவையே இவரது வாழ்க்கையின் முக்கிய வேலைகளாயிற்று. இவரது கிருதிகளில் - சுளாதிகள், ஹரிகதாம்ருதசார மங்களாசரண சந்திக்கு உரை, சக்ராப்ஜ மண்டலத்தின் விவரணை, ஐந்து சூத்திரங்கள், கீதா சூத்திரம், ஞானயக்ஞ சுளாதி ஆகியவை உள்ளன. இவரைப் பற்றி, ஹரபனஹள்ளி பீமவ்வா சொன்னது:

குஷ்டரோக வியாதிஜ்வர சதுர்த்தி பயபீதிகளனெல்ல
பிட்டோடிஸி தீர்த்த அங்காரதல்லி சமஸ்தர மஹிமெ நோடி
ஸ்மரிஸி பதுகிரோ சர்வானந்த குருகள ||
என்று தாசரின் மகிமையை பாடியிருக்கிறார்.

தாசர் தமது வாழ்க்கை முழுவதும், சஜ்ஜனர்களுக்கு உதவி, உபதேசம், அன்ன சத்திரம், கிருதிகளை இயற்றுவது என்றே கழித்தார். அவரின் சமகாலத்திய அனைத்து பீடாதிபதிகளின், குறிப்பாக உத்தராதி மடாதீசரின் கௌரவத்திற்குப் பாத்திரராகி அன்றைய கத்வால் அரசராலும் கௌரவிக்கப்பட்டிருந்தார்.
இரு மனைவிகளைக் கொண்டிருந்த சேஷதாசருக்கு இரு மகன்கள். இருவரும் இவரிடமிருந்தே அங்கிதம் பெற்று தாசராக இருந்தனர். பீமதாச மற்றும் கோவிந்ததாச என்று அந்த பரம்பரை வளர்ந்தது. தாசர், சிப்பகிரியில் குருவிற்கு சேவை செய்து வந்தார். பலருக்கு வழிகாட்டியாகவும் இருந்தார். ஆண்டு 1817ல் பிறந்த இவர், 1885 வைசாக சுத்த அஷ்டமியன்று வைகுண்டவாசியானார். ஆதாரபூர்வமான இவரது கிருதிகள் நமக்கு கிடைத்திருக்கின்றன. அனைத்து சஜ்ஜனர்களுக்கும் அவரது அருள் கிடைக்கட்டும் என்று வேண்டுவோமாக.

**வைசாக சுத்த நவமி**

**எச்சரிக்கை கேவை**

வாழ்க்கையின் ரகசியங்களைப் பற்றி தாசர் தெரிவிக்கும்போது, நாம் எப்படியிருந்து வாழவேண்டும் என்னும் செய்தியை சொல்கிறார். மனிதன், வாழ்க்கையில் சிலவற்றை பின்பற்ற வேண்டும்; சிலவற்றை விடவேண்டும். ஆனால் இவற்றின் வித்தியாசம் தெரியாமல் அலைகிறான். ஆகையாலேயே, தாசர் சில விஷயங்களைப் பற்றி எச்சரிக்கையுடன் இருங்கள் என்று ஒரு பட்டியலைக் கொடுக்கிறார். அதை தற்போது பார்ப்போம்.

சத்யவந்தர சங்கவிரலு தீர்த்தவியாதக்கெ
நித்ய ஞானியாத மேலே சிந்தெ யாதகெ ||ப||

தானு உண்ணதெ பரரிக்கத தனவித்யாதகெ
மானஹீனனாகி பாள்வ மனுஜவியாதகெ
ஞானவில்லதெ நூறுகால பதுகல்யாதகெ
மானனிய தொரெது மேலே போகவியாதகெ ||1||

மாது கேளதெ மரெதுனடெவ மக்களாதக்கெ
ப்ரேதியில்லதெ எடெயலிக்கித அன்னவியாதகெ
நீதியரிது நடெயதிருவ பண்டன்யாதகெ
சோது ஹெண்ணிகெ ஹெதரி நடெவ புருஷன்யாதகெ ||2||

சன்னெயரிது நடெயதிருவ சதியு யாதகெ
மன்னணிந்த நடெசதிருவ தொரெயு யாதகெ
முன்ன கொட்டு படெயரின்ன பயஸல்யாதகெ
சென்ன அதிகேஷவ அல்லத தெய்வவியாதகெ ||3||

வாழ்க்கையில் மனிதன் எப்படி இருக்கவேண்டும், மனிதனின் நித்ய நடவடிக்கைகள் ஆகியவற்றின் பட்டியலை கனகதாசர் இங்கு கொடுத்திருக்கிறார். மனிதன் எப்படி இருந்து, எப்படிப்பட்டவர்களின் நட்பினை பெறவேண்டும் என்பதை சரியாக உபதேசிக்கிறார். இங்கு சொல்லியிருக்கும் ஒவ்வொரு வாக்கியமும் மிகவும் பொருள்

பொதிந்தவையாக இருக்கின்றன. இவற்றைப் பின்பற்றினால் நமக்குள் அவை நல்ல மாற்றத்தைக் கொண்டுவரும் என்பதில் சந்தேகமில்லை.

மற்ற விலங்குகளைப் போல மனிதன் வாழ்ந்து சாகக்கூடாது. ஸ்ரீஹரி கொடுத்த இந்த உடலை, சாதனைகளைச் செய்து, அனைவருக்கும் உதவிகளை செய்து வாழவேண்டும் என்னும் செய்தியை கொடுக்கிறார் தாசர். இறுதியில், ஆதிகேசவனே அனைவருக்குமான தெய்வம் என்று கூறி முடிக்கிறார்.

**வைசாக சுத்த தசமி**

**வெளிப்பா தீக்ஷை**

வாழ்க்கையில் எதையும் சாதிப்பதற்கு மனிதன், விதிப்படி விரதங்களை செய்யவேண்டும். இதையே தீக்ஷை என்றனர். அக மற்றும் புற தீக்ஷைகளுக்கான முறைகளை ஞானிகளிடமிருந்து தெரிந்துகொண்டு, பின்பற்றி, சித்தி பெறவேண்டும். தீக்ஷைகளின் விவரத்தை ஜகன்னாததாசர் இவ்வாறு சொல்கிறார்.

எரடு தீக்ஷெகளிஹவு பாஹ்யான்
தரவெனிப நாமதலி புதரிம்
தரிது தீக்ஷிதனாகு தீர்க்கத்வேஷகள பிட்டு |
ஹரியெ சர்வோத்தம க்ஷராக்ஷர
புருஷ பூஜித பாத ஜன்மா
த்யரவிதூர சுகாத்ம சர்வகனெந்து ஸ்மரிசுதிரு || (17-18)

'தீக்ஷா ஹி த்விவிதா ப்ரோக்தா பாஹ்யாப்யந்தர பேதத:' தேகத்திற்கு சம்பந்தப்பட்ட, வெளியே தெரியும்படியான சம்ஸ்காரங்கள் புற தீக்ஷை என்றால், மானசிகமான பக்தி, வைராக்யம், ஞானம் ஆகியவை அக தீக்ஷை என்று அழைக்கப்படுகின்றன.

அயம் சர்வேஷ்டதாதா மே சர்வாரிஷனிவாகர: |
சர்வோத்க்ருஷ்டோ யமேவைகஸ்த தீயோஹம் ஸ மே பதி: |
இதி ஞானம் நிஸ்சிதம் யத் ஸா தீக்ஷாப்யந்தரா மதா ||

எப்போதும், ஸ்ரீஹரியே சர்வோத்தமன், படைத்தல் முதலான அஷ்டகர்த்ருத்வ, அனைத்தையும் காப்பாற்றுபவனாக, சர்வஸ்வாமியாக இருக்கிறான். அனைத்துமான ஸ்ரீஹரி ஞானானந்தமயன் என்று, அனைத்து இடங்களிலும் வியாப்தனாக இருக்கிறான். அனைத்து ஜீவர்களும் அவனின் சேவகர்களே ஆவர். உண்மையான தூய்மையான பக்திக்கு மட்டுமே தரிசனம் அளித்து, நித்யசுகமான சத்கதியைக் கொடுப்பவனாகிறான். பகவத் த்வேஷிகளை அவரவர்களின் தகுதிக்கேற்ற இடங்களில் வைக்கிறான். வேதங்களினால் போற்றப்படும் புருஷோத்தமன் ஆகிறான். ஜீவர்களின் ஸ்வரூபத்திற்கேற்ப அவரவர்களின் கதியை தீர்மானிக்கிறான். இப்படி அறிந்து தெளிவடைவதே மானச தீக்ஷை எனப்படுகிறது. வெளிப்புற தீக்ஷையைப் பற்றி தாசர் சொல்லும்போது வைஷ்ணவனின் வெளிப்புற தீக்ஷையின் பலன்களைப் பற்றி சொல்கிறார்.

மந்தனாதரு சரியே கோபீ
சந்தன ஸ்ரீமுத்ரேகள நல
விந்த தரிசுத ஸ்ரீதுளசி பத்மாக்ஷ சரகளனு |
கந்தரத மத்யதலி தரிஸி மு
குந்த ஸ்ரீபூரமண த்ரிஜக
ந்வந்த்ய சர்வஸ்வாமி மம குலதெய்வவெனெ பொரெவ || (17-20)

**வைசாக சுத்த ஏகாதசி**
**பிறவி வீணாக வேண்டாம்**

காலன தூதரு கால்பிடிதெளவாக
தாளு தாளெந்தரெ தாளுவரே |
தாளி பாரத முன்ன தர்மத களிஸிரோ |
காள சம்சார சுளிகெ சிக்கலு பேடி || --ஸ்ரீபுரந்தரதாசர்

பிறந்து வந்த ஜீவி இறப்பது நிச்சயம். இதில் சந்தேகமே இல்லை. பற்பல பிறவிகளில் செய்த புண்ணியத்தால் இந்த மனிதப்பிறவி வந்திருக்கிறது. அதிலும் இந்த பிராமண தேகம் வந்திருக்கிறது. நாம் மேம்படவேண்டுமெனில், இந்த மானிட உடலினால் மட்டுமே சாத்தியம். அதாவது இது சாதனை சரீரம். சாஸ்திரங்களில்

'தத்ராபி ஜன்ம ஷதகோடிஷு மானவத்வம்' என்று சொல்லப்பட்டிருக்கிறது. 'மானவ ஜென்ம தொட்டது, இத ஹானு மாடலு பேடி ஹுச்சப்பகளிரா' என்று தாசர் சொன்னதும் இதற்காகவே. இந்த சாதனை சரீரத்தை அர்த்தமுள்ளதாக ஆக்கிக்கொள்வதற்கு 'க்ருஹீத இவ கேசேஷு ம்ருத்யுனா தர்மமாசரேத்' என்றதுபோல திடமனதுடன் தர்மத்தை பின்பற்ற வேண்டும். இதைப் பற்றி ஸ்ரீபுரந்தரதாசர் சொல்வது:

வியர்த்தவல்லவே ஜன்ம வியர்த்தவல்லவே ||ப||

அர்தியிந்த ஹரிய நாம நித்யஸ்மரிசிதவனு ஜன்ம ||அப||

ஹரிய சேவெ மாடதவன ஹரிய குணகளெணிசிதவன
ஹரிய கொண்டாடதவன ஹரிய திளியதவன ஜன்ம ||1||
தாசரொடனெ ஆடதவன தாசரொடனெ பாடதவன
தாசர கொண்டாடதவன ஹரிதாசனாகதவன ஜன்ம ||2||
ஒந்து ஷங்க உதக தந்து சந்ததிந்த ஹரிகெ அர்ப்பிஸி
தந்தெ புரந்தரவிட்டலன ஹொாந்தி நெனெயதவன ஜன்ம ||3||

பிறந்து வந்தவனின் இலக்கு, ஸ்ரீஹரியின் பிரசாதத்தைப் பெறுவதில் இருக்கவேண்டும். இது இந்த மனிதப்பிறவியில் மட்டுமே சாத்தியம். அதற்கே 'துர்லபோ மானுஷோதேஹ:' என்றனர். இந்த சாதனைக்குத் தேவை - சத்சங்கம், ஸ்ரீஹரியின் கதைகளைக் கேட்டல், காமாதிகளை அடக்குதல், ஸ்ரீஹரியின் மகிமைகளை அறிதல், நவவிதபக்தி, பாகவத தர்மாசரணை ஆகியவை. இவற்றை அடையாத பிறவி வீண்தானே? 'பரோபகார புண்யாய, பாபாய பரபீடனம்' என்று ஸ்ரீவியாசர் சொன்னதைப் போல, தன் கடமைகளை சரிவரச் செய்து, வாழ்க்கையை அர்த்தமுள்ளதாக ஆக்கிக்கொள்வதே வாழ்க்கையின் இலக்காக இருக்கவேண்டும். விலைமதிப்பற்ற இந்த பிறவி, வீண் ஆகக்கூடாது. அதை அர்த்தமுள்ளதாக ஆக்கிக்கொள்வதில் நம் முயற்சி இருக்கட்டும்.

**வைசாக சுத்த த்வாதசி**
**தூக்கம் விழிப்ப இருக்கட்டும் -**

மனிதனின் வாழ்க்கையில் தூக்கம் என்பது கட்டாயம் தேவை. ஆனால் தூக்கத்தைப் பற்றிய சரியான அறிவு நமக்கில்லை. உணவுகளில் சாத்விக உணவுகள் இருப்பதைப் போல, தூக்கத்திலும் இருக்கிறது என்கின்றனர் தாசர்கள். நம் சாதனைக்கு தடை போடும் தூக்கம் - தாமஸ ஆகும்.

நித்ரெ பந்திதகோ அனிருத்தன சேவெகெ விக்னவ மாடுத்த ||ப||

அஸ்தமானதிந்த உதயவாகோதனக
ஸ்வஸ்ததி படகெ பஞ்சியனாடுத்த
விஸ்தாரதி வேஷனொடெ நித்ரெயில்ல
புஸ்தக ஹிடியலு மஸ்தக மணிசுத ||1||

ஹரிகதா ஸ்ரவண மாடபேகெனுதலி
பரம பகுதியிந்த குள்ளிரலு
கிரிகண்ண நோடதி கொரள மணிஸி மெய்ய
ஸ்மரணெ தப்பிசுத குருகுரு குட்டுத்த ||2||

இலிகளிகெ பெக்கு சாதிப பரியந்தெ
ஹலவு பரியலி ஈ நித்ரெயு
சலதிந்த மனுஜர நெலெகெடிசுதலிதெ
ஒலிது ஸ்ரீகிருஷ்ணன ஜாகர மாள்பல்லி ||3|| -- ஸ்ரீவியாசராஜர்

அனைத்து வேலைகளையும் தூக்கம் கெடுக்கிறது. இப்படி சொல்பவரே அதிகம். அரட்டை அடிக்கும்போது வராத தூக்கம், புத்தகத்தை கையில் எடுத்தால் உடன் வருகிறது. புண்ணிய கதைகளைக் கேட்டால் வருகிறது. கெட்ட செயல்களை செய்யும்போது வராத தூக்கம், பூஜைக்கு அமர்ந்தால் வருகிறது. மற்றவர்களுடன் பேசினால் வராத தூக்கம், பாடம் படிக்க அமர்ந்தால் உடனே வருகிறது. என்னப்பா செய்வது என்று

நினைப்பதற்குள் தூங்கியே விடுகிறோம். இவை அசதியால் வந்த தூக்கமல்ல. சோம்பேறித்தனத்தால் வரும் தாமஸ தூக்கம்.

சாஸ்திரத்திற்கு எதிரானது என்று தெரிந்தாலும், பகல் தூக்கத்தை நாம் விடுவதில்லை. 'உண்டமேலே சயன' என்னும் தாசரின் வாக்கினை உண்மையாக்குவதே நம் வேலை. அனிருத்தனின் சேவைக்கு தடையாக இருக்கும் இந்த தூக்கம், நம் சாதனைக்கான இடர் என்றார். ஸ்ரீஹரி நம்மை படைப்புக்குக் கொண்டு வந்ததே, விழிப்புடன் இருந்து இறப்பதற்கு முன் சாதனைகளை செய்வோம் என்பதற்காகவே. இதனை இந்த தூக்கத்தினால் நாம் மறந்துவிட்டோம்.

இந்த தூக்கத்திற்கு வசமாகாமல் இருங்கள் என்று ராஜர் சொல்கிறார். ராஜரின் இந்த வாக்கினை கேட்கும்போதாவது தூங்காமல் இருந்தால் நல்லது. இந்த பிரச்னையை தீர்ப்பதற்கு அந்த ஸ்ரீகிருஷ்ணனையே வேண்டுவோம்.

**வைசாக சுத்த த்ரயோதசி**
**விட்டு வாருங்கள்கொட்டு பஜியங்கள் .**

பிட்டு பன்னிரோ சம்சாரத ஹம்பல ||ப||
ஸ்ருஷ்டி பதிய சேரி நீவு சுகிசபன்னிரோ ||அப||

ஹெண்டரு மக்களு எம்போ ஹம்பல பேடிரோ
கொண்டவரல்ல கொடுவரல்ல முந்தின கதிய ||1||
எஷ்டு மாடி களிஸி தந்தரு சாலதெம்பரோ
நஷ்டமாடி இவன பதுகு எல்ல திம்பரு ||2||

நடு பீதியலி இவன எளெது செளெவரோ
கடெகண்ணு குடிஹுப்பு நோடதிந்தலி ||3||
உண்டு உட்டு குண்டினந்தெ மனெயலிருவரோ
சண்ட யமன தூதரு பந்து எளெது ஒய்வரோ ||4||

முட்டி பஜிஸிரோ ஹயவதனங்க்ரிய

நெட்டனெ முக்திமார்க்க தோருகொடுவனோ ||5|| --ஸ்ரீவாதிராஜர்

ராமாயணத்தில், ஸ்ரீராமன், பரந்தாமத்திற்கு திரும்பும் முன்னர், முக்தி யோக்யர்களை 'சமாயாத சமாயாத' என்று அழைத்தார். அதைப்போலவே இங்கு ஸ்ரீவாதிராஜர் 'பன்னிரோ பன்னிரோ' என்று அழைக்கிறார். தற்காலிகமான, பிறப்பு இறப்புகளைக் கொண்ட, சுக துக்கங்களின் கலவையான இந்த சம்சார சாகரத்திலிருந்து தப்பி, நித்ய சுகமான சத்கதிக்கு வாருங்கள் என்று அழைத்தது அனைவருக்கும் மிகவும் மகிழ்ச்சியைக் கொடுக்கிறது.

இந்த வாழ்க்கையின் நிலையைப் பற்றி, வரும் நோய் நொடிகளைப் பற்றி, ராஜர் மிகவும் அழகாக விளக்குகிறார். இது அனைவரும் அறிந்திருந்தாலும், வாழ்க்கையில் மூழ்கியிருப்பதால் சரிவர புரியாமல் இருக்கிறது. ஸ்ரீபுரந்தரதாசரும் சம்சாரத்தைப் பற்றி - 'சுள்ளு சம்சார சுளிகெ சிலுகபேடி' - என்று எச்சரிக்கிறார்.
இந்த சம்சார சுழற்சியிலிருந்து வெளிவர ராஜர் ஒரு வழியைச் சொல்கிறார். 'முட்டி பஜிஸிரோ ஹயவதனனங்க்ரிய'. ஏனெனில், அவனே அனிருத்தனாக, முக்திக்கான வழியைக் காட்டுபவனாக இருக்கிறான். விஜயதாசரும் அவரது கிருதியில் 'சம்சாரம்புதிகெ நின்ன நாமவே நாவெ' என்று பாடுகிறார்.

வாழ்க்கை முழுவதும் என்ன செய்தாலும், எவ்வளவு பரிசுகளை மரியாதைகளைப் பெற்றாலும், அவை எதுவும் நம் பின்னால் வராது. யமன் நம்மை இழுக்காமல் விடமாட்டான். 'மெல்லனெ மாதவன மனவ மெச்சிசபேகு' என்றதுபோல அவனது தரிசனத்திற்காக நாம் பாடுபடவேண்டியது நம் கடமை.

**வைசாக சுத்த சதுர்தசி**

**ஸ்ரீநாசிம்ம ஜயந்தி**

நரசிம்ஹோऽகிலாக்ஞான மதத்வாந்த திவாகர: |
ஜயத்யமித சத்ஞான சுகசக்தி பயோனிதி: ||

பிரம்மாண்டத்தின் அனைத்து ஜீவர்களின் பிம்பமூர்த்தி ஸ்ரீலக்ஷ்மி நரசிம்மன். இன்று ஸ்வாதி நட்சத்திரத்தில் பிரதோஷ காலத்தில் தூணிலிருந்து வெளிப்பட்டான். பிரம்மாதிகளுக்காக, தனது ஏகாந்த பக்தனான பிரகலாதனுக்காக தனது அற்புத ரூபத்தைக் காட்டினான். இதையே பாகவதம்:

சத்யம் விதாதும் நிஜப்ருத்ய பாஷிதம்
வியாப்திஞ்ச பூதேஷ்வகிலேஷு சாத்மன: |
அத்ருஷ்யதாத் அத்யத்புத ரூபமுத்வஹன் ஸ்தம்பே
சபாயாம் ந ம்ருகம் ந மானுஷம் || என்கிறது.

ஸ்ரீமதாசார்யரிடமிருந்து துவங்கி, பரம்பரை முழுவதுமே ஸ்ரீநரசிம்மனை பற்பல வகைகளில் ஸ்தோத்திரம் செய்திருக்கின்றது. ஹரிதாச சாகித்யம் முழுவதும் தசாவதார பத்யங்களிலும், தனித்தனியாகவும் பாடியிருப்பதை பார்க்கிறோம். ஜகன்னாததாசரின் ஹரிகதாம்ருதசாரத்தின் மங்கள பத்யம் இவ்வாறு இருக்கிறது.
ஸ்ரீரமணி கரகமலபூஜித
சாருசரண சரோஜ பிரம்ம ச
மீர வாணி பணீந்த்ர வீந்த்ர பவேந்த்ர முக வினுத |
நீரஜபவாண்டோதயஸ்திதி
காரணனே கைவல்ய தாயக
நாரசிம்மனே நமிபெ கருணிபுதெமகெ மங்களவ || (1-1)

இந்த நரசிம்ம ரூபத்தை பூஜிப்பது அனைவருக்கும் கட்டாயமாக இருக்கிறது. ஜீவரின் சாதனைக்கேற்ப, எவ்வித தடைகளுக்குமான தீர்வாக, நரசிம்மனின் அருள் தேவை. 'ந்ருசிம்ஹாதிக மன்யஸ்ச துரிதாதி நிவ்ருத்தயோ' என்று ஆசார்யர் கூறுகிறார்.

ஸ்ரீஸ்ரீபாதராஜர், தமது நீண்ட கிருதியான நரசிம்ம தண்டகத்தில், நரசிம்மர் தோன்றியதை:

தத்ப்ருத்யவாக் சத்யவம் மாடபே
காகி சர்வத்ர தான் தன்ன வியாப்தத்வம்
பத்யவாகிப்பவோல் அத்புதாகார பொ

த்தம் ஜகத்பர்த தானொந்தே சிம்ஹாக்ருதே
யாகதே மர்த்யமூர்த்யல்லதெ தத்ஸபா
ஸ்தம்பதல் டிம்ப சம்பாவனக்காகி சம்பூதநாதம்...

ஸ்ரீபுரந்தரதாசர், ஸ்ரீவிஜயதாசர் ஆகியோர் நரசிம்ம க்ஷேத்திரங்களை தரிசனம் செய்து, அங்கே இருக்கும் க்ஷேத்திர மூர்த்தியின் கிருதியினை இயற்றிப் பாடியிருப்பதை பார்க்கிறோம். நரசிம்மரின் அவதார சிந்தனை என்றால் அது ஸ்ரீமதாசார்யரின் தத்வாதத்தின் சாரமே ஆகும்.

**வைசாக பௌர்ணமி**
**பாகாாயணனே போற்றி**

ஸ்ரீமன் நாராயணனின் சாக்ஷாத் அவதாரரூபம் ஸ்ரீவேதவியாசர். ஜகத்குரு. 28வது த்வாபரத்தில் அவதரித்து, வேதங்களை ருக் முதலான கிரமத்தில் பிரித்து, சுலபமாக்கினார். அவற்றை புரிந்துகொள்ள 564 பிரம்மசூத்ரங்களை இயற்றினார். மகாபாரதம் என்னும் பெரும் சத்வ இதிகாசத்தை இயற்றி, அதில் இவரும் ஒரு பாத்திரமாக வந்தார். 18 புராணங்களை, உபபுராணங்களை இயற்றி, பகவந்தனின் மற்றும் பகவத்பக்தர்களின் மகிமைகளை விளக்கும் பாகவதத்தை இயற்றினார். அன்றைய ரிஷி முனிவர்களுக்கு குரு என்று இருந்து, இன்றும் ஸ்ரீமத்வாசார்யரிடமிருந்து சேவைகளைப் பெற்று, பதரியில் நிலைத்திருக்கிறார். இவரைப் பற்றி ஸ்ரீஜகன்னாததாசர்:

வேதபீட விரிஞ்சி பவ ச
க்ராதிசுர விக்ஞானதாயக
மோத சின்மயகாத்ர லோகபவித்ர சுசரித்ர |
ச்சேத பேத விஷாத குடிலா
ந்தாதி மத்ய விதூர ஆதா
நாதி காரண பாதராயண பாஹி சத்ராணா || (1-7)

ஸ்ரீவேதவியாசரின் மகிமைகளை, சிறப்புகளை மிகவும் அழகாக, அற்புதமாக ஒரே ஸ்லோகத்தில் எழுதினார் தாசர். இப்படி

ஸ்ரீவேதவியாசரைப் பற்றி ஹரிதாச சாகித்யத்தில் பற்பல கிருதிகள் உள்ளன. அனைவரும் பாடி புகழ்ந்திருக்கின்றனர்.

மத்வாந்தர்கத வேதவியாஸ | காயோ |
சுத்த மூருதியே சர்வேஷா || -- ஸ்ரீவாதிராஜர்

ஸ்மரிஸிதவர மனோபீஷ்ட வாசிஷ்டகிருஷ்ண
நிருத என்னய அரிஷ்ட
பரிஹரிசுவுது கஷ்டகளனு உத்கிருஷ்ட மெர்வ உன்னதவிசிஷ்ட
சுர நர உரக கின்னர கந்தர்வர
கரகமலகளிந்த வரபூஜெகொம்ப
சிரியரசனெ நம்ம விஜயவிட்டல பரா
சரசுத பலு விஸ்தர ஞானாம்புதே || - ஸ்ரீவிஜயதாசர்

ஸ்ரீஜகன்னாததாசர் - 'மத்வாந்தர்கத வேதவியாச - மம ஹ்ருத்வதனருஹ சன்னிவாச' என்றார். இவர், வினாயகரை ஸ்தோத்திரம் செய்யும்போது - 'வேதவியாச கருணாபாத்ர' என்றே அழைக்கிறார்.

**வைசாக பகுள பிரதமை**
**கருணாமயியான ஸ்ரீஹரி**

ஏனு கருணானிதியோ ஹரி ம
த்தேனு பக்தாதீனனோ இ
ந்னேனு ஈதன லீலே இச்சா மாத்ரதி ஜகவ |
தானெ ஸ்ருஜிசுவ பாலிசுவ நி
ர்வாண மொதலாதகில லோக
ஸ்தானதலி மத்தவரனிட்டானந்த படிசுவனு || --
ஸ்ரீஜகன்னாததாசர்

ஸ்ரீமதாசார்யர் ஸ்ரீஹரியை 'கருணாபூர்ண வரப்ரத சரிதம்' என்றார். ஸ்ரீஹரி கருணாமயி. பிரம்மாதிகளாலும் ஊகிக்கமுடியாதது அவனது காருண்யம். பிரம்மாண்டத்தின் படைத்தல் முதலான அஷ்ட கர்த்ருத்வங்களை, தனது லீலைகளாக செய்துவருபவன். ஸ்ரீஹரி பக்தவத்ஸலன். அதற்கே ஆசார்யர் 'ஸ்ருஷ்டி சம்ஹார

லீலாவிலாசாததம்' என்றார். பிறக்க வைத்து, சாதனைகளை செய்யவைத்து, வைகுண்டத்திலும் நம்மை காப்பவன் அவனே. அதற்கே தாசர் 'ஏனு, மத்தேனு, இன்னேனு' என்றெல்லாம் அவனின் அபாரமான காருண்யத்தின் அனந்த்யத்தை வர்ணிக்கிறார். இத்தகையவனை அடைவது மிகவும் சுலபமானதாகும்.

மலகி பரமாதரதி பாடலு
குளிது கேளுவ குளிது பாடலு
நிலுவ நிந்தரெ நலிவ நலிதரெ ஒலிவெ நிமகெம்ப |
சுலபனோ ஹரி தன்னவரனர
களிகெ பிட்டகலனு ரமாதவ
நொலிசலரியதே பாமரரு பளலுவரு பவதொளகெ || (2-5)

பக்தன் தனது நிலைக்கேற்ப, அமர்ந்து, படுத்து, நின்று, நடந்து இப்படி எப்படியோ ஸ்ரீஹரியை நினைத்தாலும், அவன் காட்சியளித்து அருள்வான். தாசர், ஸ்ரீஹரியின் காருண்யத்தைக் கூறும்போது 'ஒடல நெளலந்ததலி', 'கண்ணிகெவெயந்ததலி', 'ஹிந்தெ முந்தெடபலதி ஔஹொரகிந்திரேஷனு தன்னவரனெந்தெந்து சலஹுவ' என்று வர்ணித்து, ஸ்ரீஹரியின் அபரிமித காருண்யத்தை நமக்கு தெரியப்படுத்துகிறார்.

இத்தகைய ஸ்ரீஹரியை 'ஒலிசலரியதெ பாமரரு பளலுவரு பவதொளகெ' என்று மருகுகிறார். இது அவனின் காருண்யம்தானே? ஸ்ரீஹரியின் காருண்யத்தைக் கண்டு இறுதியில் 'இவன காருண்யகேனெம்பே' என்று வியப்படைகிறார். அவன் கருணைக்கடல், ஆபத்பாந்தவன், எதையும் எதிர்பாராத நண்பன். பக்தர்களின் வேண்டுதல்களை நிறைவேற்றும் பிரபு. இதனை அறிவதே அவனின் மகிமை.

**வைசாக பகுள த்விதியை**
**பாாகிகேவியே. கருணை காட்டு**

ஸ்ரீமதாசார்யர் நிறுவிய சித்தாந்தத்தை பக்தி சித்தாந்தம் என்றும் சொல்லலாம். ஹரிதாசர்களும் இதையே தங்களின் ஆதாரமாக

எடுத்துக்கொண்டு, பகவந்தனின் தரிசனத்தைப் பெறுவதே முக்கியக் குறிக்கோளாகக் கொண்டு, தங்கள் சாகித்யங்களில் அவனை பாடிப் புகழ்வதை பார்க்கிறோம். இந்த பக்திக்கு அபிமானினி பாரதிதேவி.

சகல சாதனகெல்ல சித்திகொளிசுவுது
பகுதி காரணவல்லதெ பேரே சாதனவுண்டே ||ப||

முகுதி ஜனரெல்ல கேளி இதர சாதனகெல்ல
பகுதிகபிமானி பாரதீதேவியர கருண
முகுதி சாதனவெந்து மனதி பஜிஸி
அகிலேஷ புரந்தரவிட்டல தானொலிவ ||

ஸ்ரீபுரந்தரதாசர், இந்த கிருதியில், பக்தியே முக்திக்கு முக்கிய சாதனை என்று சொல்லி, இதன் அபிமானி தேவதை, வாயுதேவரின் நிஜபத்னியான பாரதிதேவி என்று, இவரின் அருள் நமக்குத் தேவை என்றார். அனைத்து வேதங்களுக்கும் பாரதிதேவியே அபிமானி. பாரதிரமணனான வாயுதேவர் மற்றும் அவனது ப்ரபுவான புரந்தரவிட்டலனின் கருணை எப்போதும் இருக்கட்டும் என்றார். இதைப் போலவே, தாசர் இன்னொரு இடத்திலும்:

பாரதிதேவிய நெனெ நெனெ
நிருத பகுதிகிது மனெ மனெ || என்றார். மேலும்:

'அக்ஷயதிந்தலி கொட்ட பகுதிய ரக்ஷிசென்னனு அனுதின' என்று வேண்டினார்.

சாதகர்கள் செய்யும் பக்திக்கு அபிமானியான பாரதிதேவியை, மனமுருகி பாடிப் புகழ்ந்தது இவ்வாறு:

பகுதிகபிமானி பாரதிதேவியர கருண
முகுதி சாதனவெந்து மனதி பஜிஸி
அகிலேஷ புரந்தரவிட்டல தானொலிவ || என்றார்.

மகாபாரதத்தில், கிருஷ்ண, பீமருக்குப் பிறகான இடம், திரௌபதியாக அவதரித்த பாரதிதேவிக்கே. இவரே பூமியின் பாரத்தைக் குறைக்கக் காரணமானவர். ஸ்ரீமதாசார்யரின் கிரந்தங் களுக்கு, டீகை எழுதிய ஸ்ரீஜயதீர்த்தர் - 'பவதியதனு பாவா தேட மூகோடிவாக்மி...' என்று பாரதிதேவியை வணங்குவதைப் பார்க்கிறோம்.

**வைசாக பகுள த்ருதியை**
**உண்மையான கன்யன்**

உண்மையான பொருளில் தன்யன் என்று அழைத்துக் கொள்வது - ஸ்ரீஹரி. இவரின் தரிசனத்தைப் பெற்றவர் தன்யர். இந்த தன்ய பாவத்தைப் பெற்றிருப்பவன் யார்? எப்படி? என்னும் கேள்விகளுக்கு பதில் இங்கு உள்ளது. ஸ்ரீமதாசார்யர் கொடுத்த பட்டியலைப் பின்பற்றினால், தன்யர் என்று சொல்லிக் கொள்ளமுடியும் என்றார்.

பரசதி படெதம்மனெம்பவ தன்ய
ஹரதி மக்களன போஷிசுவவ தன்ய
சிரி பந்திரலு நோடி நடெதவ தன்ய
தரணிசுரர பூஜி மாள்பனெ தன்ய
இதரந்தெ சம்சாரதொளகிஹ தன்ய
நிருத பாத்ரஸ்னான மாள்பனே தன்ய
தரணிகெ சப அர்க்ய கொடுவவ தன்ய
சுரமுகனிகெ உணிசுவனீவெ தன்ய
மரெது துர்மத நெனசதவனெ தன்ய
ஹரிதின வ்ரத த்ருடனாதவ தன்ய
உரு க்ஷேத்ரகள யாத்ரெ மாள்பனெ தன்ய
பரபீடெகளிகெ காணத மனுஜ தன்ய
பரகார்யங்களிகெ சஹயனாஹ தன்ய
சரீராபிமானவ பிட்டவ தன்ய
வரபஞ்சபேதவ திளிதவ தன்ய
ஹரிகிந்திரெகெ பேதவெம்பவ தன்ய
ஹரமுக்யரலி பக்திமாள்பனெ தன்ய
தருள தேவரபூஜெ பிட்டவ தன்ய

நரரிச்சைசிதொஸ்து கொடுவவ தன்ய
கொரதெ வ்ருத்திகெ சமனிஹனெ தா தன்ய
குருமத்வாந்தர்கத ப்ராணேஷ விட்டலன
சரணகமல பொந்தி பாள்வனெ தன்ய || -- ஸ்ரீபிராணேச தாசர்

வாழ்க்கையை புனிதமாக்கிக் கொள்ள இங்கு சொன்ன விஷயங்களை பின்பற்றினால் ஸ்ரீஹரியின் கிருபைக்கு பாத்திரராவதில் சந்தேகமில்லை. இப்படி தன்யானவன், இஹ பரங்களிலும் சுகத்தையே காண்பான். சமூகத்திலும் மரியாதை பெற்று, ஒரு சிறந்த வழிகாட்டியாக இருப்பான். குருவிற்கு, பெரியவர்களுக்கு, ஸ்ரீஹரிக்கு ப்ரியனாகி சத்கதியைப் பெறுவான். இங்கு நிரூபிக்கப்பட்ட விஷயங்களின் தொகுப்பு மிகவும் அழகாக வந்திருக்கின்றன.

**வைசாக பகுள சதுர்த்தி**

**யார் ஹரிதாசன்?**

ஹரிதாசன் என்றால் ஸ்ரீஹரிக்கு ப்ரியமானவர். ஸ்ரீஹரி நினைப்பதற்கு கொஞ்சமும் எதிராகச் செய்யாதவன். ஸ்ரீமதாசார்யர் மத்வரின் சித்தாந்தத்தில் திடமான பக்தி வைத்து, த்வைத சித்தாந்தத்தை முழுமையாக நம்பி, அவரை பின்பற்றுபவராகிறவனே, உண்மையான ஹரிதாசன். ஸ்ரீமத்வர் சொன்னதுபோல 'ததலம் பஹுலோக விசிந்தனயா ப்ரவணம் குரு மானசமீஷபதே'. இதையே ஸ்ரீபுரந்தரதாசர்:

ஹரிதாசனாதரெ ஹேகிரபேகு
நரலோகத சிந்த பிட்டிரபேகு ||

ஈஷ - தாசர்களின் நிலையை அறிந்து 'நாஹம் கர்த்தா ஹரி: கர்த்தா' என்னும் சிந்தனையுடன், தன் சாதனைகளை நிறைவேற்றிக் கொள்பவனே ஹரிதாசன்.

ஹரியில்லதன்யத்ர தெய்வவில்ல எனபேகு
மார்தனே ஜகக்கெ குரு எனலுபேகு |

புரந்தரதாசரே தாசரெனபேகு
சிரி விஜயவிட்டலன ஸ்மரணே மாடலேபேகு || --ஸ்ரீவிஜயதாசர்

மேலும், தினப்படி வாழ்க்கையில் எப்படி இருந்து, சாதனைகளை செய்யவேண்டும் என்பதை விளக்குகிறார்.

இந்து நாளெகெ எம்ப யோசனெ பிடபேகு
இந்திரியகளன்னெல்ல நிக்ரஹிசபேகு |
பந்தத்தெல்ல பரலி ஈகலே எனபேகு
அந்தவரு எனகெ பந்துகள எனபேகு ||

பாகவத தர்மங்களை பின்பற்றி, அனைவருக்கும் உதவியாக, ஸ்ரீஹரியை 'ஹரிரேவ பித்ருமாத்ரு கதி:' என்று வணங்க வேண்டும். மேலும் இன்னொரு இடத்தில்:

அன்ன பானாதிகளிகெ அவசர பீளதிரபேகு
கண்ணித்து குருடனெந்தெனிசபேகு
சன்னாகி வாயு மததலி எந்திரபேகு
தன்னொளகெ தா தாளிது நகுதலிரபேகு || -- ஸ்ரீவிஜயதாசர்

'யத்ருச்சாலாப சந்த்ருப்த' என்று, 'பந்தத்தெல்லா பரலி கோவிந்தன தய ஒந்திரலி' என்று வியாச தாச சாகித்யங்களை ஈடுபாட்டுடன் படிக்கவேண்டும். 'ஹரிசர்வோத்தம - வாயுஜீவோத்தம' என்னும் நுடி மனதில் எப்போதும் இருக்கவேண்டும். இந்த நற்குணங்களைப் பெற்றவனே ஹரிதாசன் எனப்படுகிறான்.

**வைசாக பகுள பஞ்சமி**

**ஹரிகாசர்களின் லட்சணம்**

ஹரிதாசர லக்ஷண இரபேகு ஈ பரி
கருவ கோப மத மத்ஸராதி பிடபேகு
மருதமதகெ எல்லி சரிகாணினெனுதலி
தரியொளு கூகி டங்குரவ ஹொயலிபேகு
எரடாரு புண்ட்ரவ விரசிஸி பஞ்சமுத்ரா
தரராகி தப்தாங்கித தரிசபேகு புஜதலி

சிரி பொம்ம ஹராத்யரிகெ தரதம்ய பாவதிந்த
எரகி என்னொளகித்து பூரியந்தாடலிபேகு
கரண நயன ஸ்ரவண சரன நாஸ வதன
பரிபரி அங்ககளு ஹரிவித்தவென்னபேகு
குருஹிரியரிகெ அவர பூர்வகதிந்த
கரவ முகிது நமஸ்கரிஸி நுதிசபேகு
நரெஹொரெயவரிகெ நிருத இத்தரு பே
சரகொளிசதெ சஞ்சரிசுத்தலிரபேகு
ஹரண ஹரியாதீன, நெரெத சதி சுதரு
நிருத ஹரிகெ தாசரு எந்து குணிசபேகு
பரமபகுதி ஞான விரக்தி மார்க்கவு
தொரகுவதக்கெ சஜ்ஜனர சங்கவாகபேகு
ஹரிவாசர ஹரிசரிதெ ஹரிஸ்ரவண ஹரிபூஜெ
ஹரிஸ்மரண அந்தரஷுசி இரலிபேகு
பரிபரதேவதி விஜயவிட்டலகதி
சுரராத்யரிகெந்து உரவணிஸி நுடிபேகு || -- ஸ்ரீவிஜயதாசர்

இந்த சுளாதியில், ஹரிதாசர் என்று ஸ்ரீஹரி அடையாளம் காண்பதற்கு எப்படிப்பட்ட லட்சணங்களை அவர் கொண்டிருக்கவேண்டும் என்பதன் விவரங்களைக் கொடுக்கிறார் ஸ்ரீவிஜயதாசர், இஹ பரங்களில் சுகத்தைப் பெறுவதற்கு இது மிகவும் முக்கியம். இந்த நற்குணங்களைப் பெற்று, ஹரிதாசன் ஆகும்வரை 'தொரெயதண்ண முகுதி'.

ஈ பரி இத்தவங்கெ அனந்த ஜனமக்கெ |
தாபத்ரயகளில்ல விஜயவிட்டல பல்ல ||

தாசர் கூறியுள்ள இந்த லட்சணங்களைப் பின்பற்றினால் அதுவே இந்த மற்றும் வேறு உலகத்தில் சுகத்திற்கு காரணம். சமூகத்தின் சுகம் மற்றும் அமைதிக்கும் இவையே காரணம் ஆகும்.

**வைசாக பகுள சஷ்டி**
**மக்வரோ நம்மை மேம்படுக்குபவர்**

மத்வராயர பாக்ய எந்ததோ வர்ணிசலு
சுத்த சத்யாத்மகவாத சரீர
அத்வைத மதவெம்போ அரண்யவ பொக்கு
வித்வம்ஸ மாடி வாதிகளனெ கெத்து
பத்ததி தப்பதந்தெ மதவனுத்தரிஸி
ம்ருத்திகைசிதரு சர்வசஜ்ஜனரன்னு
சித்தராவெந்து கீர்வாணரெல்லரு
எத்தெத்து குணிதரு கரவ ஹொடெது
வித்வாம்சனானெந்து அஹங்கரிசிதெ இவர
பாத பத்மதல்லி அதித்ருட பகுதி மாடி
மத்வராயர நமகெ உத்தாரகவெந்து
பதேபதேகெ திளிது கொண்டாடிதரெ
சித்திதாயக சிரிமோகன்னவிட்டல
ஹ்ருத்ருஷ்டியலி நிந்து சலஹுவனு பேக || -- ஸ்ரீமோகனதாசர்

ஸ்ரீமோகனதாசர், ஸ்ரீவிஜயதாசருக்கு மிகவும் பிரியமான சிஷ்யர் மற்றும் வளர்ப்பு மகன். தந்தை, தாய், குரு என அனைத்துமான தாசரிடமிருந்து தீக்ஷை - அங்கிதத்தைப் பெற்று பற்பல கிருதிகளை இயற்றினார். இங்கு ஸ்ரீமதாசார்யரின் மகிமைகளை வர்ணிக்கிறார். ஸ்ரீவிஜயதாசர் 'மத்வராயர கருணா படெயதவ தரெயொளகெ இத்தரேனு இல்லதித்தரேனு', 'அத்வைத மதாரண்ய தாஹன குணசாந்த்ர' என்றெல்லாம் புகழ்ந்ததைக் கேட்டு, மோகனதாசர் மேற்சொன்ன கிருதியை இயற்றினார்.

வாயுதேவரின் அவதாரமான ஸ்ரீமதாசார்யர், ஆனந்தஞானமுள்ள உடலைக் கொண்டவர். 32 லட்சணங்களையும் கொண்டவர். ஜீவோத்தமர். சஜ்ஜனர்களுக்கு தூய்மையான ஞானத்தை வழங்குவதற்கு இவ்வுலகிற்கு வந்த மகாத்மர். மித்யா ஞானிகளைக் கண்டித்து, தத்வ வாதத்தைக் கண்டித்தார். ஈச தாச பாவம் சித்தியாவதற்கு, நித்யானந்தத்தைப் பெறுவதற்கு, ஆசார்ய மத்வரின் சித்தாந்தத்தைப் பெறுவதைத் தவிர வேறு வழியில்லை.

இவரைப் பின்பற்றாமல் வேறு கதியில்லை. அதற்கே தாசர் 'மத்வராயரே நமகெ உத்தாரகரெந்து பதே பதேகெ திளிது கொண்டாடு' என்றார். பகவந்தன் கருணாமயி. எதையும் எதிர்பாராமல் உதவும் நண்பன். ஆகவே தாசர் ஸ்ரீஹரியை நம்மை நின்று காப்பாற்றுபவன் என்றார்.

ஸ்ரீபத்பனாப தீர்த்தர் முதலான மொத்த பரம்பரையும் ஆசார்ய மத்வரை போற்றி பாடியிருக்கிறது. 'ஆசார்யா: ஸ்ரீமதாசார்ய: சந்துமே ஜன்மஜன்மனி'.

**வைசாக பகுள சப்தமி**

**இருங்கு வெல்லாங்கள்**

ஈச பேகு இத்து ஜெயிஸ பேகு |
ஹேஸிகெ சம்சாரதலி ஆஷெ லேஷ இடத ஹாகே ||ப||
பிறந்த வந்த மனிதனுக்கு ஆறுதல் அளிக்கும், சவால் கொடுக்கும், தன்னம்பிக்கை அளிக்கும் வாக்காக இது இருக்கிறது. வாழ்க்கையில் அனைவரும் எப்போதும் எந்த நிலையிலும், துக்கத்தை பெறாமல், சுகத்தையே பெறுவதற்கு தாசர் சொல்லும் முத்தைப் போன்ற சொல்லாகும் இது.

தாமரஸ ஜலதந்தெ ப்ரேமனிட்டு பவதொளு
ஸ்வாமி ராமனெனுத பாடி காமிதவ கைகொம்பரெல்ல ||1||

இந்த சம்சாரத்தில் 'இரபேகு இரதிரபேகு' என்பது போல, தண்ணீரில் இருக்கும் தாமரையைப் போல, மனிதனும் பட்டும் படாமலும் வாழ்க்கையில் இருக்கவேண்டும். ஆனால் ஸ்ரீஹரியின் இடைவிடாத பக்தி இருக்கவேண்டும் என்கிறார். இதுவே சுக வாழ்க்கையின் ரகசியம் என்கிறார்.

கேரு ஹண்ணின்னலி பீஜ சேரிதந்தெ சம்சாரதி
மேரி ஆஷெ மாடத ஹாகெ தீரகிருஷ்ணன நெனெயுவரெல்ல ||2||

சம்சாரத்தைத் துறந்து வெளியில் வரமுடியாது. இருக்கவேண்டும். ஆனால் அதில் மூழ்கி விடக்கூடாது. இது ஒரு யோகம். ஆனால் ஸ்ரீஹரியிடம் நெருங்க வேண்டும். எப்போதும் தகுதிக்கு மீறின ஆசை இருக்கக்கூடாது.

மாம்சதாசெகெ மத்ஸ்யவு ஹிம்ஸெபட்ட பரியோளு
மோச ஹோகதெ புரந்தரவிட்டலா ஜகதீஷனெனுத
கொண்டாடுவரெல்ல ||3||

ஆசைகளின் கூடாரமே வாழ்க்கை. அதிலும் சபலம் என்பது ஒரு நோய். உதாரணத்திற்கு மீன். புழுவிற்கு ஆசைப்பட்டு உயிரை விடுகிறது. பெண், பொன், மண்ணுக்காக போராடி வாழ்வதே இந்த சம்சாரம். இவற்றிலிருந்து தூரத்தில் இருந்து வாழ்வதே நமது குறிக்கோளாக இருக்கவேண்டும். இந்த ரகசியத்தை தாசர் தகுந்த உதாரணத்துடன் விளக்குகிறார்.

சாதனை ஜீவருக்கு, ஸ்ரீபுரந்தரதாசர் கொடுத்த தன்னம்பிக்கை வார்த்தைகள் இவை. ஆசையில்லாமல் வாழ்க்கையில் இருந்து ஜெயித்து வாருங்கள் என்றார். வாழ்க்கைக்கு பயந்து என்றும் பேடி போல ஓடி ஒளியாமல், அதன் ரகசியத்தைப் புரிந்து, ஸ்ரீஹரியின் மேல் பாரத்தைப் போட்டு, ஜெயித்துக் காட்டுங்கள் என்றார். தன்னம்பிக்கையை வளர்க்கிறார்.

**வைசாக பகுள அஷ்டமி**

**காசன் என்ற நினை**

சமூகத்தில் தற்காலிக விஷயங்களுக்கு ஆசைப்பட்டு, எதையும் சாதிக்காமல், நானே சரி, நானே வென்றேன், எனக்கு சமம் யாரும் இல்லை என்றெல்லாம் சொல்லியவாறு, வாழ்க்கையைக் கழித்து இறப்பவர்களே அதிகம். இப்படியிருப்பவர்களை சமூகம் ஒதுக்கிவிடும். இவர்களைப் பற்றி ஸ்ரீபுரந்தரதாசர் சொல்வதைக் கேட்போம்.

ஹங்கிஸி ஹங்கிஸி எனகெ ஹரிநாம கலிசிதரு
பங்கிஸி பங்கிஸி எனகெ பயலாஸெ பிடிசிதரு

கங்கெடிஸி காம க்ரோத பிடிசிதரு
என்ன நிந்திஸித பந்து பளக பாயபடகரிந்த
நானு பதுகிதெனோ ஹரியே காடிகாடி கைவல்ய
பதவித்தரு காசு ஹுட்டதந்தெ ப்ராயஸ்சித்த மாடிதரு
மீசலு மாடிதரு ஹரியே நின்ன ஒட்வெயெந்து
லேசு கொடோ நம்ம புரந்தரவிட்டலா நின்ன
தாசர தாசனெந்தெனிசய்யா ஹரியே || -- ஸ்ரீபுரந்தரதாசர்

இங்கு தாசர் கொஞ்சமே வார்த்தைகளில் மிகப்பெரிய விஷயங்களை சொல்லியிருக்கிறார். இங்கு அவரது புலமையை, அனுபவத்தை, ஸ்ரீஹரியின் மேல் இருக்கும் நம்பிக்கையை பார்க்கமுடியும். ஒரு சாதகன், ஹரிகுருகளின் கருணைக்கு பாத்திரராவதற்கு வாழவேண்டிய வாழ்க்கை எப்படி இருக்கவேண்டும் என்பதை உணர்த்துகிறார். இவரே இன்னொரு இடத்தில் 'நிந்தகரிரபேகு' என்றும் சொல்லியிருக்கிறார். அதற்கு சமமாக இருக்கிறது இந்த உகாபோகம்.

பிறப்பு இறப்புகளுக்கு நடுவில் இருப்பதே வாழ்க்கை. இங்கு சுக துக்கங்கள், மான அவமானங்கள், வெற்றி தோல்விகள் சகஜம். சமூகத்தில் நம்மை புகழும், திட்டும், ஒதுக்கும் மனிதர்கள் இருப்பதும் சகஜம். இந்த சந்தர்ப்பங்களில் சாதனைகளை முடிக்க வந்த ஜீவி எப்படி இருந்து, தன் சாதனைகளுக்கு எவ்வித தடைகளும் வராதவாறு அவற்றை செய்து முடிக்கவேண்டும் என்பதை வெகு சுவாரசியமாக கூறியிருக்கிறார்.

ஸ்ரீகிருஷ்ணனிடம் குந்தி கூறியது - 'விபத: சந்துன: ஷஸ்வத் தத்ர தத்ர ஜகத்பதே'. இப்படி வாழ்க்கையில் அவ்வப்போது கஷ்ட நஷ்டங்கள் வரவேண்டும். அப்போதாவது ஸ்ரீஹரியின் நினைவு வந்து, அது வைராக்கியத்திற்கு வழி வகுக்கும். அதற்கே தாசர் 'நின்ன தாசனெந்தெனிசய்யா' என்று வேண்டினார். அது மட்டுமல்லாமல், 'நின்ன தாசர தாசர தாசர தாஸ்யவ நீடெய்யா' என்று விண்ணப்பித்தார்.

எந்தெந்திகு நின்ன தாசனாகபேகோ |
புரந்தரவிட்டலா சரணவன்னு தோரபேகோ ||

**வைசாக பகுள நவமி**
**அன்னகானமே சிறங்க கானம்**

'அத்ருத்வாத் சர்வலோகானம் அன்னமித்யாச்யதே ஹரி:' எல்லா காலங்களிலும் எல்லாருக்கும் திருப்தி அளிப்பவன், அன்னத்தில் அதே பெயரிலேயே இருக்கும் ஸ்ரீஹரி. அனைத்து உலகங்களுக்கும் ஆதாரமாக இருப்பவன் ஆகையாலும் இவன் அன்ன என்று அழைக்கப்படுகிறான். இந்த காரணத்தால் புரந்தரதாசர் 'அன்னதானக்கெ மிகிலாத தானகளில்லா', 'அதிஷயத தானகளு அன்னதானத ஹிந்தே' என்றெல்லாம் பாடினார்.

உலகத்தில் அனைவரும், அனைத்து விலங்குகளும் அன்னத்தை உண்கின்றன. அன்னம், தண்ணீர் - இவற்றை யாருக்கும் இல்லை என்று சொல்லக்கூடாதென்று சாஸ்திரம் சொல்கின்றது. ஸ்ரீபுரந்தரதாசரின் வாக்கு இது.
சோரனாதரு சண்டாலவாதரு ப்ரம்ஹக்ன பித்ர பாதகியாதரு
ஆவனாதரு மத்யான்ஹ காலக்கெ அதிதியாகி மனெகெ பந்தரெ
துதிஸி அன்னவனிட்டு ஸ்வாமி புரந்தரவிட்டலகெ அர்ப்பிஸபேகு

ஸ்ரீவிஜயதாசரும் தமது ஒரு சுளாதியில் அன்னத்தைப் பற்றி சொல்கிறார்.

அன்ன இத்தரெ அது பவனவாகி தோருவது
அன்ன நீயதிரெ அது கானனக்கெ சரி என்னி
அன்னதிந்தலி பந்த கனதுரிதஹர காணோ
அன்னதிந்தலி சர்வபூர்ண கலிசுவரு
அன்ன இத்தவன கீர்த்தி உன்னதவாகி த்ரிபு
வனதொளகெ தும்பி சென்னாகி பொளெபதய்ய
அன்னதானக்கிந்த இன்னு மிகிலு தானகளில்ல
ஹொன்னு ஹண கொடலு ஆ கண்ய அன்னதானக்கெ
அனந்தகால முகவன்னெ மாடலு விப்ர
குணிஸிதுதகெ சரியென்னபஹுதெ திளிது
அனந்த மூர்த்தி விஜயவிட்டலரேய
தன்னவனீவனெந்து மன்னிஸி சலஹுவ ||

ஸ்ரீபுரந்தரதாசரும் ஒரு உகாபோகத்தில் அன்னதானமே சிறந்தது என்று குறிப்பிடுகிறார்.

அன்னபானாதிகளீயோ அப்யாகத ப்ராம்மணரிகெ
அன்னபானாதிகளீயோ ஆ சண்டாலசப்தரிகெ
அன்னபானாதிகளீயோ அப்ததீன க்ருபணரிகெ
ஹஸிவெகெ ஹாகவன்னர்ப்பிசோ புரந்தரவிட்டலகெ ||

**வைசாக பகுள தசமி**
**சத்யசங்கல்பனான ஸ்ரீஹரி**

பாத்ரனெந்தனிஸொ பாபாத்மனெந்தெனிஸொ இவ
ஸ்ரோத்ரியனெந்தெனிஸொ பலு ஷுண்டனெந்தெனிஸோ
புத்ரமித்ராத்யரிம் பைஸி புஜெயகயிஸோ
கர்த்ரு நீ ஜகக்கெ சர்வத்ர வியாபக தேவ ||
நின்ன சங்கல்பானுசார மாடோ
என்ன சாகுவ தொரெயெ மான்ய மானவனெ | -- ஸ்ரீஜகன்னாததாசர்

இது உலகத்திற்கு தாசர் கொடுக்கும் செய்தி. ‘சத்ய சங்கல்பனோ விஷ்ணு:’ .

ஹரிசித்த சத்ய ஹரி சித்த |
நர சித்தக்கெ பந்தத்து லவலேஷ நடெயது || ஸ்ரீபுரந்தரதாசர்:

ஸ்ரீஹரியைப் பற்றிய ஞானம் பெற்று பக்தி செய்வது ஜீவனின் கடமை. நாம் விரும்புவதைக் கொடுப்பது ஸ்ரீஹரியின் விருப்பமே. ஆனால் ஸ்ரீஹரி கொடுத்த நம்பிக்கை ‘ நித்யாபியுக்தானாம் யோகக்ஷேமம் வஹாம்யஹம்’ பாகவதர்களின் நலனை நான் காக்கிறேன். அதற்கே தாசர் சொல்வது இவ்வாறு.

குணகாலகர்ம ஸ்வபாவங்கள
அனுசரிஸி புண்யபாபகள மாடிஸி பலக
ளுணிஸி முக்தர மாடி பொரெவெ கருணாளு ||

இதனை அறியாமல் மெய்மறந்து இருப்பவர்களை மூர்க்கன் என்று அழைக்கிறார்.

கரணஜன்ய புண்ய பாபவெரடு ஹரியாதீனவெந்து |
ஸ்மரிசுதிரலதி பகுதியிந்த ஹருஷ படதலிப்ப மனுஜ |
நீசனல்லவெ எந்த மாது நெனபினல்லிடோண ||
ஸ்ரீஜகன்னாததாசரின் மனதிலிருந்து வந்த வார்த்தைகள் இவ்வாறு.
' நின்ன சித்தக்கெ பந்தந்தெ மாடோ' .

நின்ன சங்கல்பவல்லதெ இன்னு அன்யதாவாக பல்லதெ ஹீங்கெ
சன்னாகி நா திளியதெ மந்த மானவனாகி பாளிதெ ||

அனைத்து உலகங்களுக்கும் தலைவனான ஸ்ரீஹரி 'கர்த்தும் அகர்த்தும் அன்யதா கர்துமபி சமர்த்த:' ஆகையால் அனைத்தும் அவன் வசமே இருந்து, அவன் இஷ்டப்படியே நடக்கின்றன.

**வைசாக பகுள ஏகாதசி**

**அவனே காப்பாற்றுவான்**

ஹரிதாசர்கள் தங்கள் வாழ்க்கை முழுக்க, தம்மை நம்பிய மக்களுக்கு, நம்பிக்கை, ஆதரவு தரும் உபதேசங்களை கொடுத்து வந்தனர். அதையே தமது கிருதிகள் மூலமாகவும் பரப்பினர். அவற்றில் ஒன்றை பார்ப்போம். ஸ்ரீஜகன்னாததாசரின் உபதேசம் மற்றும் சிந்தனை இது.

அனுபந்திகளல்லி மமதெயனு பிடு விஷய பா
சனெய நீட்யாடு சுக்ஞான பக்திய பேடு
மனதல்லி ஹரிமூர்த்தியனெ நோடு சுக்ஞா
ஜனர கொண்டாடு அஞ்ஞானிகள சஹவாச சுடு
வனஜனாபன பூஜெயனு மாடு ப்ரதி
க்ஷண பிடதெ பகவத்குணகள கொண்டாடு ||

ஸ்ரீஜகன்னாததாசரின் குருவான ஸ்ரீகோபாலதாசர், சம்சாரம் என்னும் இந்தத் துன்பத்திலிருந்து வெளிவருவதற்கு, மனதின் சஞ்சலத்தை நிலைப்படுத்த செய்யவேண்டியவற்றை இவ்வாறு கூறுகிறார்.

சலிசதெ த்யானவ மாடு மன
ஒலிசததெ ஸ்ரவணவன்னு மாடு
சுலபத ஜஷதொளோல்யாடு சித்த
ஒளகாகதிரலு கீர்த்தனெகள பாடு ||

ஸ்ரீஹரியின் தரிசனம் பெறுவதற்கு நாம் எப்படி இருக்கவேண்டும் என்பதை ஸ்ரீவியாசராஜர் கூறுகிறார்.
ஹரி சின்ஹாங்கித ஹரிதினதுபவாஸ
நெரெயூர்த்வபுண்ட்ர துளசிமாலே |
ஹரியுத்ஸவ சேவெ ஹரிதாசர சங்க
துரிதாப்திகெ கும்பசம்பவனல்லதெ ||
இப்படி இருந்தால் என்ன பலன் கிடைக்கும்?
நின்ன கீருத்தி கிவிகெ நாமவென்ன நாலிகெகெ
என்ன கண்ணிகெ நின்ன மூர்த்தி தொரெயலோ
என்ன மனகெ நெனவ சிரி விஜயவிட்டலராம || --ஸ்ரீவிஜயதாசர்

**வைசாக பகுள த்வாதசி**

**கர்வக்கை அடக்குகல்**

ஹரிதாச சாகித்ய முழுவதும் காணப்படும் முக்கிய அம்சம் - ஈச தாச பாவம். ஸ்ரீஹரி சர்வக்ஞன், சர்வசக்தன், சர்வதந்த்ர ஸ்வதந்த்ரன், சர்வாந்தர்யாமி, ஞானானந்தமயன், குணபரிபூர்ணன், தோஷங்கள் அற்றவன். ஆனால் நானோ அல்பதந்த்ர, அ-ஸ்வதந்த்ரன். இதுவே அனைத்து சூத்திரங்களிலிருந்து நிரூபிக்கப்பட்டவை. டீகா க்ருபாதரிடமிருந்து துவங்கி, அனைத்து ஹரிதாசர்களும் கர்வத்தை அடக்கி, ஸ்ரீஹரியிடம் சரணாகதி அடைவதை நாம் பார்க்கிறோம். இது முக்கியம். அப்போதே ஸ்ரீஹரி தரிசனம் கொடுப்பான் என்பதை சொல்கின்றனர். சஜ்ஜனர்களுக்காக குரு காட்டிய வழி இதுவாக இருக்கிறது. இதுவே ஆத்ம நிவேதனம் ஆகும்.

பக்திலேஷத ப்ரசக்தி எனகில்ல
ஞானவெம்புதனேன காணே நா
வைராக்யத வாருதெ சேரதெனகெ
ஆசார விசார எனகில்ல

ஞானவெம்புதனேன காணே நா
ஆனொப்பனெ கிருஷ்ண நின்னவரொளு
மனுஷபசு தயெயிந்தென்ன நோடய்ய || -- ஸ்ரீவியாசராஜர்

மதமத்ஸரதி பந்து கெலவு காலவ களெதெ
குதிவ காமக்ரோதகளல்லி சங்கடகொம்பெ
அந்தகனாகி பரரபேடி பேசரிசிதெ
சாதன சம்பதக்கெ ஹரிபாதவனு நெரெனம்பததரொளகெ
பஹுவியாதிகளல்லி சங்கடகொம்பெ -- பதுமனாப
ஹயவதனன்ன பாதவன்னு னம்போ மனவே || -- ஸ்ரீவாதிராஜர்
பாதகரொளகெல்ல நானு வெக்களனய்ய
ப்ராயஸ்சித்ததலி நின்ன நாம வெக்களவய்ய
பாதகவ நா மாடிதெனு ப்ராயஸ்சித்தவ நீடு
இன்னேதர பயவய்ய புரந்தரவிட்டலா || -- ஸ்ரீபுரந்தரதாசர்

பாபகர்மனு நானு பாப சம்பவ நானு
பாபகாயனு நானு பாபிஷ்டனு நானு
பாபிகள சங்க ப்ராபுத நர நானு
ஈ பரியவகுண ஷரசாவிர உண்டு
அபார ஜித நானு விஜயவிட்டல நீனு
ஸ்ரீபாதவனு தோரிரூப உத்தரிபுது || -- ஸ்ரீவிஜயதாசர்

**வைசாக பகுள த்ரயோதசி**

**ஹரி சிக்க சக்ய**

'க்லேஷானந்தகளீசாதீன' என்றார் ஸ்ரீஜகன்னாததாசர். இதையே வேறொரு விதமாக மொதலகல் சேஷதாசர் தமது ஒரு உகாபோகத்தில் சொல்கிறார்.

ஒந்து ஸ்மரிசுதிரெ அனந்தவாகுதிதெ ம
த்தொந்து ஸ்மரிசுதிரெ க்லேஷவஹுதோ
குந்து லேசுகள காலபேததிந்த சம்
பந்தகைசிதெனகெ சார்வபௌம
இந்திராபதி நின்ன சத்யசங்கல்பவ
மந்தனாதவ நானு தாடுவனே

அந்து மாடித கர்ம ஒந்தொந்து ஸ்மரிசுதிரெ
தந்தெ என்னய பாக்யக்கெணெ யாவுதோ
இந்தின தௌர்பாக்ய எணிஸி குணிஸி நோடெ
குந்திகெ சம உண்டே வசுந்தரெயலி
மந்தரோத்தார குருவிஜயவிட்டல நின்ன
பொந்திதவகினிது பலவேனோ ||

'சுகவாகலி பஹு துக்கவாகலி சக நீனாகிரு பாண்டுரங்க' என்று தாசவாணி சொல்கிறது. ஆனால் பொதுவாக, எந்நேரமும் ஸ்ரீஹரியை நினைத்திருந்தாலும், பலவித பிரச்னைகளை சந்திக்க நேர்கிறது. அனைத்தும் அவனின் விருப்பப்படியே நடக்கிறது என்று நினைக்க வேண்டும். இதற்கு நம் முந்தைய வினைப்பயன்களே காரணம். ஸ்ரீபுரந்தரதாசர் 'ஹரி சித்த சத்ய, நர சித்தக்கெ பந்தத்து லவலேஷ நடெயது' என்றது அனைவரின் அனுபவமே ஆகும். ஸ்ரீஜகன்னாததாசர் சொல்வது:

சத்ய சங்கல்ப சதா எனித்துதே புரு
ஷார்த்த வெந்தரிதத்யதிக சந்தோஷதலி நெனெவுத்த புஞ்சிசுபுது ||

இதை எப்போதும் கவனத்தில் வைக்க வேண்டும். ஸ்ரீவிஜயதாசரும் இதைப் பற்றி சொன்னது:

நின்ன சித்தக்கெ பந்துதனு மாடு சர்வேஷ |
என்ன ஸ்வாதந்த்ர்ய லவமாத்ர உண்டே ஸ்வாமி ||

**வைசாக பகுள சதுர்தசி**
**காமம். குரோதம் வேண்டும்**

மனிதனுக்கு காமம் முதலான அரிஷட்வர்கங்களின் பிரபாவம் அதிகம். இவை மனதை அதன் இஷ்டப்படி இழுத்துக்கொண்டு போகின்றன. இது அனைவரின் அனுபவமே ஆகும். ஸ்ரீதாசர் இந்த காமம், குரோதம் முதலியன நம்மை எப்படி இழுத்துக் கொண்டு போகின்றன என்பதைப் பற்றி விளக்குகிறார். ஸ்ரீஹரியின் மற்றும் அவன் பக்தர்களின் உதவியில்லாமல் இவற்றிலிருந்து வெளியில் வரமுடியாது. அதற்கே ராஜர், ஸ்ரீகிருஷ்ணா என்னைக் காப்பாற்று

என்றார். ஸ்ரீவிஜயதாசரோ, இந்த அரிஷட் வர்கங்கள் இருக்கட்டும், ஆனால் அவை ஸ்ரீஹரியை நோக்கி இருக்கட்டும் என்று சுவாரசியமாகக் கூறினார்.

நின்ன நோடுவ காமவே எனகிரலி
நின்ன த்வேஷர கொடெ க்ரோதவெ எனகிரலி
நின்ன சரணதல்லி மோஹவே எனகிரலி
நின்ன பிடனெம்போ போதவெ எனகிரலி
நின்ன நெனெசுவல்லி மதவே எனகிரலி
நின்ன கொண்டாடுவர சங்கவே எனகிரலி
நின்னவனெந்தெம்போ கீருத்தி எனகிரலி
நின்ன கூடாடுவ ஆடவே எனகிரலி
நின்ன அஹிதவாத வஞ்சனே எனகிரலி
நின்ன மூருதி விஜயவிட்டல சம்ப்ன்ன ப்ரசன்ன ||
-- ஸ்ரீவிஜயதாசர்

பொதுவாக மனிதரில் ஞான பக்தி வைராக்யம் இருக்கவே இருக்கிறது. தேவையில்லாத விஷயங்களைப் பற்றிய ஞானம், மனைவி மக்களிடம் நட்பினாலான பக்தி, ஸ்ரீஹரியிடம், ஆன்மிக விஷயங்களில் விரக்தி - இவை நல்லதல்ல; அழிவிற்கே கொண்டு செல்பவை என்று தாசர், மேலே கூறியவாறு நம்மில் காம, க்ரோதம் ஆகியவை இருக்கவேண்டும் என்கிறார். இந்த சிந்தனை நமக்கு வரவேண்டும். இதன் உண்மையான பொருளை அறிந்து அதன்படி நடக்கவேண்டும்.

ஸ்ரீவிஜயதாசர் 'இரபேகு சம்சாரதொளில்லதிர பேகு' என்று சொன்னதில் அர்த்தத்தை புரிந்து கொள்ளவேண்டும். 'பல்லவகெ பவாப்தி நெல்லிகாயியந்தெ' என்பது போல ஆயிற்று. தாசர் மேலே கூறியவற்றை பின்பற்றி நடப்போம்.

**வைசாக அமாவாசை**

**ஹரி:பாகா** :

ஹரிதாச சாகித்யத்தில் முக்கியமான கருத்து விஷ்ணு சர்வோத்தமத்வத்தை நிறுவுதல். இதுவே ஹரிதாசர்களின் உயிர்மூச்சு. இதை தாச சாகித்யம் முழுவதிலும் காண்கிறோம்.

வேத சாஸ்திர புராணங்களில் இருப்பதையே, ஸ்ரீமதாசார்யர் தமது தத்வவாதத்தின் மூலம் தெரியப்படுத்தியிருக்கிறார். இவரை பின்பற்றி வந்த ஹரிதாசர்கள் இதையே மொழிபெயர்த்து மக்களிடையே பரப்பினர்.

ஸ்ரீமதாசார்யர்:
அசேஷகுண பூர்ணத்வம் சர்வதோஷ சமுஜ்யத: |
விஷ்ணோர்ஸ்ய தத்தந்த்ரம் சம்யக் வினிர்ணய: ||
சர்வக்ஞ ஈஸ்வரதம: ச ச சர்வஷக்தி: |
பூர்ண வியயாத்மபல சித்ஸுக வீர்யசார: ||

ந ஹரே பரமோ ந ஹரே சத்ருஷ: பரம: சது சர்வ சிதாத்மகணாத்|

ஏதத் வினா ந கஸ்யாபி விமுக்தி: ஸ்யாத் கதஞ்சன

அதாவது, ஸ்ரீஹரியின் சர்வோத்தமத்வத்தை அறியாமல், யாருக்கும் எப்போதும் முக்தியில்லை.

பிடி பிடி சந்தேஹவ பொடவி மனுஷ்யரெல்ல |
ஒடெயனொப்பனெ ஜகக்கெல்ல ரங்கவிட்டலா || ஸ்ரீஸ்ரீபாதராஜர்:

உக்குவ துப்பக்கெ கையிக்குவே நானு |
சக்ரதர பரமாத்மனொப்ப நல்லதில்லவெந்து || ஸ்ரீவியாசராஜர்:

ஹரியே சர்வோத்தம அராணி லகுமி பொம்ம
ஹரி இந்த்ராத்யமரரு தவ சேவகரு
வரதாரதம்ய பஞ்சபேத சத்யவெந்து
நெரெ பேளுவ வாயுமதத சுக்ஞானவனு ||

விவித தெய்வரொளகெ விஷ்ணு உத்தமனெந்து |
தேவகள ஒடனுடிசலெ || -- ஸ்ரீவாதிராஜர்:

அந்தே நிர்ணயவாருதக்கெ சிரி
இந்திராபதி பரதேவதெயெந்து || -- ஸ்ரீபுரந்தரதாசர்:

அந்து ஸ்வயம்வரதல்லி பிரம்ம | ருத்ராதி இந்த்ராதிகளெல்லர

ஜரிது இந்திரெ நித்யானந்த நிர்தோஷ குண ||
பூர்ணனெந்து மாலெய ஹாகிதளு ||
சந்தேஹாத்யபி நஷ்யதி எந்து ஸ்ருதி
வ்ருந்தகளெல்லவு சாருதிதெ
புரந்தரவிட்டல சர்வோத்தமனெம்பல்லி
சம்தேஹவ பிட்டு சுகிசலோ ஜீவ ||

ஹரியே சர்வோத்தமனெந்து சர்வேஸ்வரனெந்து
சர்வர தணெ ஸ்வரமணனெந்து சர்வானுகனெந்து
சர்வமூர்த்தி நம்ம புரந்தரவிட்டலன ||

ஹரியே சர்வோத்தமன ஹரியே பரதேவதெ
ஹரி சர்வவிஷ்வமயம் ஜகத் ||

ஹரிஹரி பிரம்மரொளு ஹிரியவராரெந்து
ஹரிகிஸி சுராசுர |
வரப்ருகுமுனி பந்து கரதெத்தி ஸ்திரவாகி
ஹரியே பரதெய்வவெந்து அருஹித காரண ||

நாராயணனே சர்வோத்தமனெம்பல்லி சந்தேஹ பிட்டு
சுகிசலோ ஜீவ ||

ஹரியே சர்வோத்தம ஹரியே சர்வேஸ்வர
ஹரிமயவெல்லவெனுத திளிது
சிரிகாகிநெலெ ஆதிகேசவ ராயன
சரன கமலவ கீர்த்திசுவனே குலஜ || -- ஸ்ரீகனகதாசர்:

அஜ ஞானாதிக பல்ல | அனல ஸ்னேஹித பல்ல |
புஜகேஷ்வரபல்ல...
த்ரிஜகாதிபதி த்ரிவிக்ரமனெம்புதனு ||

ஹரியே ஸ்வதந்த்ர சதுரதச பவனகெ |
பரமேஷ்டி சிவாத்யராதகெ தாசரென்னு || -- ஸ்ரீவிஜயதாசர்:

முனினாரதனு கேளி ப்ருகுமுனியனு களுஹி |
வனஜனாபனே தெய்வவெந்து நிர்ணயிஸிதரு ||

ஹரியே சர்வோத்தமனு ஹரி பரதெய்வதெ
ஹரி குணபரிபூர்ணதர பாஹிர வியாப்தா
ஹரி பரதத்வசிரியரசா பரமேஷ்டி ஜனக
ஹரி சுர முக்ய பூசுரர பரிபாலா ||

ஹரியே ஜனகெ கர்தா ஹரியே ஜகக்கே பர்த்தா |
ஹரி சர்வசஹா விஜயவிட்டலனெ ஷக்தானென்னி ||
ஹரியே சர்வோத்தமனு ஹரியே பரதெய்வதெ |
ஹரிதாசரெம்போ பிருதின கோலே
ஹரிதாசரெம்போ பிருதின ஹிக்காளே
சிரிபாகிலொளு நுடிசேவு கோலே || -- ஸ்ரீகோபாலதாசர்:

ஹரி பரதெய்வ சதுர்தசலோகக்கெ |
உரகன முண்டிகெ துளுகி பேளுவே நானு ||

உத்தமோத்தம தெய்வ நித்ய நீனாகிரலிக்கெ |
மத்தெ அன்ய தெய்வனாரிசல்யாகே || -- ஸ்ரீமஹிபதிதாசர்

ஸ்ரீஜகன்னாததாசர்:
பரம விஷ்ணு ஸ்வதந்த்ர மாயா
தருணி வக்ஷஸ்தள நிவாஸினி
சரசிஜோத்பவ ப்ராணரீர்வரு சசிவரேனெனிசுவரு ||

சர்வவேதோத்தமனு சர்வக
சர்வகுணபூர்ண சர்வத
சர்வதந்த்ர ஸ்வதந்த்ர சர்வாதார சர்வாத்மா |
சர்வதோமுக சர்வனாமக
சர்வஜன சம்பூஜ்ய சாஸ்வத
சர்வகாமத சர்வசாக்ஷிகெ சர்வஜித் சர்வ ||

பரம புருஷ பாவனாஷ பதிதபாவன பரதர
பரம ஆப்த பராத்பராத்மக பரஞ்சோதி ஸ்வரூப
பரம புருஷ ஷரண ஜன பாலகனே ஜய ஜய
ஷரதிஷயன ஸ்வேதவர்ண ஸ்வேதவாஹன ப்ரீயனே
பாரதீஷனொடெயனெ பூபார நிளுஹித ஸ்வாமி நமோ நமோ
ஜாரு ஸ்வேதத்வீபவாஸி கோபாலவிட்டல |

பர பரமேஷ்டி நாராயண சர்வத பரிபூர்ண
பரதந்த்ரதூர சுபகுணார்ண
பரஞ்சோதி பரதத்வபரம கல்யாண
பரதர பரதம பரம புருஷ || -- ஸ்ரீகோபாலதாசர்:

ஜய ஜய தேவவரேண்ய மஹ
த்பய நிவாரணனெ அரண்ய குணா
ஸ்ரய தோஷ துரிதாரண்ய தனம்
ஜய ஜகதேகஷரண்ய அஹ
லய விவர்ஜித லோகத்ரய வியாப்த நிஜபக்த
ப்ரிய கோர பய ஹர தயமாடெந்தெனு || -- ஸ்ரீஜகன்னாததாசர்:

ஸ்ரீகுருஜகன்னாததாசர்:
ஹரி நீனே சர்வக்ஞ ஸ்வதந்த்ர சர்வாதாரக
ஹரி நீனே சர்வோத்தாதக சர்வேஷ
ஹரி நீனே சர்வஜனக ஹரி நீனே சர்வபாலக
ஹரி நீனே சர்வமாரக ஹரி நீனே சர்வப்ரேரக
ஹரி நீனே சர்வகத ஹரி நீனே சர்வவியாப்த
ஹரி நின்ன கருனதிந்த சிரி ஜகஜ்ஜனனியாகி
ஹரி நின்ன கருணதிந்த பரமேஷ்டி மருதரு குருகளாகிஹரு
ஹரி நின்ன கருணதிந்த கிரிஷேந்த்ரரு பதவி பொந்திதரு
ஹரி நின்ன கருணதிந்த சகலரு ஸ்திதிய நெய்திஹரு
ஹரி குருஜகன்னாதவிட்டல நினகெ நீனே சமனோ ||

ஹரப்பனஹல்லி பீமவ்வா:
பரமதயாளு நீ சர்வஸ்வதந்த்ர |
ஆர்ய நீனொப்ப நினகார்யரின்னுண்டேனோ ||
விஷ்ணு சர்வோத்தம ஈகில்யவதரிசித

வேத வேதகளெல்ல பீமேஷக்ருஷ்ணனு |
தானொப்பனெ ஜகக்கெந்து சாருதலிஹதெ |
தானொப்பனெ ஜகக்கெந்து சாருதலிரலு
ஆதி மூருத்தி ஆக்ஞே மீரி நடெதரெ ||

உத்பத்தி ஸ்திதி சம்ஹாரா நியதிர்ஜானமாத்வதி: |
பந்தமோக்ஷௌ ச புருஷாத் யஸ்மாத் ச ஹரி: ஏகராட் |ஸ்கந்த

ஸ்ரீஹரி சர்வோத்தமத்தைப் பற்றி, அவனின் மகிமைகளைப் பற்றி ஹரிதாச சாகித்யத்தில் பற்பல கிருதிகள் உள்ளன.

***

இத்துடன் சைத்ர & வைசாக மாதத்தின் ஹரிதாச சிந்தனைகள் முடிந்தன. அடுத்த பாகத்தில் அடுத்த மாதங்களுக்கான ஹரிதாச சிந்தனைகளை பார்க்கலாம்.

**ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து**

***